# ஏ வானமே!

கறுப்பு மேகங்கள்
கண்ணெடுத்துப் பாராமல்
கரை கடந்து போகின்றன

குழாயடியில்
குடக் கூட்டம்
கும்மாளமிடுகின்றன

தண்ணீர்ப் பானைகள்
தலையில் ஏறியதால்
''தலைக்கனம்'' கொண்டுள்ளன.

பசும் வயல்கள்
பச்சை ஆடை இழந்து
பரதேசியாகி யுள்ளன
ஏ வானமே!
தலையிலும் ''வயிற்றி''லும்

சுமக்கும் இந்த
தாய்க் குலத்தைக்
கண்ட பின்னும்
கண்ணீர் வரவில்லையா?

தண்ணீர் கொண்டு வரும்
கார்ப்பரேஷன் லாரியே
வழி நெடுக
''கண்ணீர்'' விடுகிறதே!

ஏ வானமே!
உனைக் கெஞ்சுகிறேன்
உறவர் தோள்விட்டுப்
பானை இறங்கி
கலப்பை ஏற
மனமிரங்கு!

—கே. ஆர். விஸ்வம்

வண்ணப்படம்: திலீப் பானர்ஜி

கல்லூரி தேர்தல்களில் பல மாணவர்கள் போட்டியிடட்டும். வேண்டாம் என்று கூறவில்லை. ஆனால் தங்களுடைய பிரசாரங்களைச் சம்பந்தப்பட்ட கல்லூரியின் காம்பவுண்டுக்குள் வைத்துக் கொள்ளலாமே! தங்களின் திருமுகங்களைப் பஸ் நிலையங்களில் ஒட்டித்தான் வெற்றி பெற வேண்டுமா? அதுவும்எந்




தெந்த வண்டிகள் இங்கேநிற்கும் என்று எண்களைக் குறித்திருக்கும் இடத்திலா போஸ்டர்களை ஒட்ட வேண்டும்? என்னைப் போல் சென்னைக்குப் புதிதாக வருபவர்கள்குறிப்பிட்ட நம்பர் பஸ் எந்த ஸ்டாண்டில் நிற்கிறது என்று தெரியாமல் விழிப்பதில் இந்த மாணவர்களுக்கு என்ன சந்தோஷம்?

அவதிக்குள்ளானவர்: ஆர். அரிகோபி



கோவை காந்திபுரம் சிக்னல் பகுதியில் ஒரு விநாயகர் ஆலயம் உள்ளது. அது நடைபாதையில் அமைந்துள்ளது. இதன் முன்னே இரண்டு 'போர்டு'கள் உள்ளன. கறுப்பு நிறம் ஒன்று; காவி நிறம் ஒன்று. கறுப்பு நிறத்தில் தி.க. வினர் கோரிக்கை: ''கடவுள் இல்லை. பாதசாரிகளுக்கு இடையூறாக இருக்கும் இக்கோயிலை உடனே அகற்று''. அதற்கருகில் உள்ள போர்டில்: ''கடவுள் உண்டு! நான் மறந்தாலும் எனது நா 'நமசிவாய' என்கிறது. ஆஸ்திகர்கள் மனத்தைப்புண்படுத்தும் இப்பலகையை உடனே அகற்றுங்கள்!''

—டி. வி. தாசன்





## புனித வஸ்துவிலும் கலப்படமா?

என் சகோதரர்கள் இருவரையும் பார்த்ததும் எனக்குப் பகீரென்றது. அவர்கள் இருவர் நெற்றியிலும் காலணா அகலத்திற்குக் கறுப்பாக வெந்த மாதிரி தோல் உருமாறியிருந்தது. 'ஏன் இப்படி இருக்கிறது?' என்று கேட்டதற்கு, ''கோவிலில் கொடுக்கும் ஒருவிதக் குங்குமத்தினால் இப்படிக் கறுப்பாகித் தோல் நிறம் மாறிவிட்டது'' என்று வருத்தத்துடன் சொன்னார்கள்.

உலகம் வேகமாக முன்னேறும் இந்த நாட்களில், நாம் புதிது புதிதாக நிறைய கண்டுபிடிக்கா விட்டாலும் புராதனமாய் உள்ள சில நல்ல பொருள்களையேனும் நாசமாக்காமல் இருக்கலாம் அல்லவா?

—பத்மா பத்மநாபன்.

# புகுந்த வீட்டில் பிணமாகும் பெண்கள்...

ரமாமணி சுந்தர்

“மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்'' என்று பாடிய பாரதி பிறந்த இந்தப் பாரத நாட்டின் தலைநகரிலே, இன்று மாதரையே கொளுத்தும் ஒரு அவல நிலை ஏற்பட்டிருப்பதை நினைத்தால் மனம் வேதனையால் துடிக்கிறது.

கடந்த ஏழு ஆண்டுகளில் நாட்டில் வரதட்சிணை மரணங்கள் இரண்டு மடங்காக அதிகரித்திருக்கின்றன என்று உத்தேசமாகக் கணக்கிடப் பட்டிருக்கிறது. மத்திய உள்துறை அமைச்சகத்தின் அறிக்கையின்படி இத்தகைய மரணங்கள் வடநாட்டில் குறிப்பாகத் தில்லி, ஹரியானா, பஞ்சாப் மாநிலங்களிலும், குஜராத் மாநிலத்தின் சில பகுதிகளிலும் அதிகமாகச் சம்பவிக்கின்றன.



பலியான பெண் சந்திரமோஹினி

பொருளாதாரத்தின் அடிமட்டத்தைச் சேர்ந்த பெண்களை விட, மத்திய வர்க்கத்தைச் சேர்ந்த பெண்களே பெரும்பாலும் வரதட்சிணைக் கொடுமைக்குப் பலியாகிறார்கள். படித்து வேலை பார்க்கும் பெண்களும் இத்தகைய கொடுமைக்கு ஆளாகிறார்கள் என்ற உண்மை நமக்கு வியப்பையும் வேதனையையும் உண்டாக்குகிறது.

சென்ற ஆண்டு அக்டோபரில் பலியான தில்லி கிருஷ்ண நகரைச் சேர்ந்த கௌசல்யாவின் கதையைக் கேளுங்கள். திருமணத்தின்பொழுது பணம், நகை, டீ. வி. ஃப்ரிஜ் என்று ஏராளமாகச் சீர் செய்தும், திருப்தியடையாத அவள் கணவனும் அவனைச் சேர்ந்தவர்களும் ஓராண்டுக்கெல்லாம் ஸ்கூட்டரோ, 10,000 ரூபாய் பணமோ வாங்கி வரும்படி கௌசல்யாவைப் பிறந்த வீட்டிற்குத் துரத்தி யடித்தார்கள். அவள் தந்தை அவ்வளவு பெரிய தொகையைக் கொடுக்க இயலாது என்றவுடன் 'ஓ'வென்று கதறி அழுதாள் கௌசல்யா. ஒரு வழியாக அவளைச் சமாதானம் செய்து புகுந்த வீட்டில் கொண்டு விட்ட தந்தையிடம், ''பணம் கொடுக்கவில்லை என்றால் உங்கள் பெண்ணை உயிருடன் பார்க்க முடியாது!'' என்று மாப்பிள்ளையும், அவன் வீட்டாரும் மிரட்டியதாகத் தெரிகிறது. ஓரிரண்டு நாட்கள் கழித்து மகள், தந்தைக்கு அவர்கள் கேட்கும் பணத்தைக் கொடுக்கா விட்டால் தன்னைக் கொலை செய்து விடுவார்கள் என்று கண்ணீர் மல்கக் கடிதம் எழுதினாள். ஒரு மாத இடைவெளிக்குப் பிறகு போலீஸாரின் தகவலின் பேரில் ஓடிவந்த கௌசல்யாவின் தந்தை கண்ட காட்சி, புகுந்த வீட்டில் கருகிச் சாம்பலாகக் கிடந்த தன் அருமை மகளின் உடல். ஒரு மனித உயிரை விட ஸ்கூட்டர் வைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை அவ்வளவு பெரியதா?

இன்றைய நாகரிகச் சூழ்நிலையில் நாலு பேருக்குச் சமமாக ஆடம்பரமாக வாழ நினைக்கும் சில இளைஞர்கள் மற்ற விஷயங்களில் பெற்றோர்களை எதிர்க்கத் தயாராக இருந்தாலும் இவ்விஷயத்தில் மாத்திரம் அவர்களுக்கு உடந்தையாக இருக்கிறார்கள். ஒரு வீட்டில் சீர் கொண்டுவர இயலாத மருமகளை மாமியார் கெட்டியாகப் பிடித்துக் கொள்ள, பிள்ளை கெரசின் ஊற்றி மனைவிக்குத் தீமூட்டினான். பெண்ணின் கதறலைக் கேட்ட அக்கம் பக்கத்தினர் தக்க சமயத்தில் ஓடிவந்து அவர்கள் பிடியிலிருந்து அப்பெண்ணை மீட்டு ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள்.

ஷாலிமார்பாக்கைச் சேர்ந்த கண் டாக்டர் ரவி பூஷண் கர்க் தனக்குச் சமமாகச் சம்பாதிக்கும் டாக்டர் பிரானை மணந்தும் திருப்தியடையாது நர்ஸிங் ஹோம் வைப்பதற்கான பணத்தை மனைவியிடமிருந்து கறக்க முடியாத கோபத்தில் கெரஸினை ஊற்றி அவளைத் தீக்கிரையாக்கினான். சுப்ரீம் கோர்ட்டில் ஸ்டெனோவாகப் பணி புரிந்த சந்திரமோஹினியையோ அவள் கணவன் சிம்லாவுக்கு உல்லாசப் பயணம் அழைத்துச் சென்று அங்கேயே அவளைத் தீர்த்துக் கட்டினான்.



பலியான மற்றொரு பெண் விஜயகுமாரி



இனிய மண வாழ்க்கையை எதிர்பார்த்த கௌசல்யா




✖ தில்லியில் வரதட்சிணை மரணங்கள்

''பெண்டாட்டி செத்தால் புது மாப்பிள்ளை'' என்பது போல், வந்த மனைவியிடமிருந்து எவ்வளவு பணம் பறிக்க முடியுமோ அவ்வளவு பறித்தும் அவர்களுடைய பணத்தாசையும், பொருளாசையும் அடங்கவில்லையென்றால் அப்பெண்ணைத் தீர்த்துக் கட்டிவிட்டு, சீருடனும், பணத்துடனும் மறுபடியும் மாப்பிள்ளைக் கோலம் போட நினைக்கும் இந்த ஆண்கள் எவ்வளவு பெரிய குற்றவாளிகள்! இவர்களுக்கு என்ன தண்டனை விதித்தாலும் தகும்.

1961ல் இயற்றப்பட்ட வரதட்சிணை ஒழிப்புச் சட்டத்தின்படி திருமணங்களில் டௌரி வாங்குவதோ, கொடுப்பதோ குற்றம். இந்தச் சட்டம் அமுலில் இருந்தும் வரதட்சிணைக் கொடுமை நாளுக்கு நாள் அதிகரித்த வண்ணம் இருப்பதிலிருந்தே இது ஓர் உபயோகமற்ற பல்லைப் பிடுங்கின சட்டம் என்பது புலனாகிறது. இந்தச் சட்டத்தின்படி கட்டாயத்தின் பேரில் கொடுக்கப்படும் பணமோ, பொருளோதான் டௌரி. பரிசாகக் கொடுக்கப்படுவது டௌரி ஆகாது. மேலும் டௌரி கொடுத்தவர்களோ, சம்பந்தப்பட்டவர்களோ ஓராண்டுக்குள் புகார் தொடுத்தால்தான் நடவடிக்கை எடுக்க முடியும். இப்படிப் பல 'ஓட்டைகள்' உள்ள இந்தச் சட்டத்தை மாற்றி அமைப்பதற்கான மசோதா ஒன்றைப் பாராளு மன்றத்தில் கொண்டுவர மாதர் சங்கங்கள் முயற்சி செய்கின்றன.

வரதட்சிணைத் தொல்லையால் இன்னலுற்றிருக்கும் பெண்களுக்கு உதவி செய்வதற்காகத் தில்லி சமூக நல இலாகா வரதட்சிணை ஒழிப்புப் பிரிவு ஒன்றைத் துவக்கியிருக்கிறது. தில்லி போலீஸ் கமிஷனர் அலுவலகத்தில் வரதட்சிணைக் கொடுமைக்குப் பலியான பெண்களின் வழக்குகளைக் கவனிப்பதற்காக டௌரி செல் ஒன்று டிபுடி போலீஸ் கமிஷனர் திருமதி கன்வல்ஜீத் டியூலின் கீழ் இயங்குகிறது.

சென்ற ஓராண்டு காலத்தில் கோர்ட்டில் விசாரணைக்கு வந்த பதினொரு வரதட்சிணைக் கொலை, அல்லது தற்கொலை வழக்குகளில் நான்கு வழக்குகளில் குற்றவாளிகளுக்கு ஆயுள் தண்டனை வழங்கப்பட்டது. சுதா கோயல் என்ற எட்டு மாதக் கர்ப்பிணிப் பெண்ணைத் தீக்கிரையாக்கிய குற்றத்திற்காக அவள் கணவன், மைத்துனர் மாமியார் ஆகியோருக்கு மே 27 ஆம் தேதியன்று நீதிபதி அகர்வால் மரண தண்டனை விதித்த செய்தி பெரும் பரபரப்பை உண்டாக்கியது. ஒரு மணப் பெண் — எரிப்பு வழக்கில் முதல் தடவையாகக் குற்றவாளிகளுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்ட இந்தச் செய்தி மற்ற கொடுமைக்கார கணவன், மாமியார் போன்றவர்களுக்குப் படிப்பினையாகவும், எச்சரிக்கையாகவும் இருக்கும் என்று எதிர்பார்த்தவர்கள், அடுத்து வந்த நாட்களிலும் செய்தித் தாள்களில்

✖ தகேஜ் விரோதி சேத்னா மஞ்ச் நடத்திய ஊர்வலம்



தொடர்ந்து வெளிவந்த மணப் பெண்—எரிப்புச் செய்திகளைப் பார்த்ததும் ஏமாற்ற மடைந்தார்கள்.

தலைநகரில் தலைவிரித்தாடும் இந்த வரதட்சிணை அரக்கனை எப்படியாவது ஒழித்துக் கட்டுவது என்று கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார்கள், பல மாதர் சங்கங்களைச் சேர்ந்த சமூக சேவகிகள். இவ்விதமுள்ள ஐந்து மாதர் சங்கங்கள் சேர்ந்து அமைத்துள்ள தகேஜ் விரோதி சேதனா மன்ச் (வரதட்சிணை எதிர்ப்புக் குழு) என்னும் குழுவின் சார்பில் நூற்றுக் கணக்கான பெண் மணிகள் பாராளு மன்றத்தை நோக்கிச் சென்ற ஆண்டு ஊர்வலமாகச் சென்றார்கள். வரதட்சிணைச் சட்டங்களை மாற்றி அமைக்க வேண்டும் என்றும், திருமணச் செலவிற்கான உச்ச வரம்பு போன்ற பல புதிய சட்டங்களை இயற்ற வேண்டும் என்றும் வலியுறுத்திப் பேசினார்கள்.

ஊர்வலம் மேடைப் பேச்சு என்றில்லாமல், இந்தச் சங்கங்களின் சமூக சேவகிகள் வரதட்சிணைக் கொடுமைக்கு ஆளாகும் பெண்களுக்கு ஆக்கப் பூர்வமான உதவிகள் புரிகிறார்கள். சீர், சென்றது போதாது என்ற காரணத்தால் புகுந்த வீட்டாரால் துன்புறுத்தப்படும் பெண்கள் இவர்களிடம் முறையிடுகிறார்கள். இரு தரப்பாரிடமும் பேசிக் கூடியவரை அவர்களிடையே சமாதான உடன்படிக்கை உண்டாக்க முயற்சி செய்கிறார்கள். இந்தச் சேவகிகள். வக்கீல்களின் உதவியோடு தேவையானவர்களுக்குச் சட்ட ஆலோசனைகளும் வழங்கப்படுகின்றன.

சில சமயங்களில் சட்டங்கள், போலீஸ் இவற்றின் உதவி இல்லாமல் இந்தச் சேவகிகள் தங்கள் முயற்சியாலேயே புரியும் சாதனைகள் நம்மைப் பிரமிக்க வைக்கின்றன. டில்லி நகரில் ஒரு பெண்ணை லட்ச ரூபாய் வரை செலவு செய்து தடபுடலாகத் திருமணம் செய்து கொடுத்திருந்தார்கள். அப்படியும் திருப்தியடையாது அப்பெண்ணை அவள் கணவன், மாமியார் மாமனார் மூவருமாகச் சதித்திட்டம் தீட்டி எரித்தும், தக்க சமயத்தில் அக்கம் பக்கத்தில் குடியிருப்பவர்கள் செய்த உதவியால் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு உயிர் தப்பினாள். இத்தனைக்கும் பிறகு அந்தக் கொடூர மனிதர்களுடன் வாழ விரும்பாத அப் பெண், தனக்குச் சீராகக் கொடுக்கப்பட்ட சாமான், நகைகளை யெல்லாம் திருப்பித் தருமாறு கேட்டாள். அவர்களா கொடுப்பார்கள்? வக்கீல் நோட்டீஸ் எல்லாம் அனுப்பித் திரும்பப் பெற எத்தனை காலம் ஆகுமோ? ஜான்வாடி மஹிளா சமிதியினர் அப்பெண்ணின் உதவிக்கு வந்தார்கள்! கூட்டமாகச் சென்ற இப்பெண்கள் அவர்கள் வீட்டை ''கேரோ'' செய்தார்கள். வீட்டிற்குள் நுழைந்த சமிதியின் தலைவியும், காரியதரிசியும் வாசலில் தயாராக நிறுத்தி வைத்திருந்த லாரியில் பெண்ணுக்குச் சீராகக் கொடுத்திருந்த சோபா செட், டி. வி., தையல் மெஷின், கட்டில்கள், பீரோ, ஃப்ரிஜ், எல்லாவற்றையும் ஏற்றிப் பெண்ணின் வீட்டில் கொண்டு சேர்த்தார்கள்.

பெண்கள் நினைத்தால் எதையும் சாதிக்க முடியும் என்பதை இந்நிகழ்ச்சி எடுத்துக் காட்டுகிறது. அக்கம் பக்கத்தில் நடக்கும் அக்கிரமங்களைப் பார்த்தும் சாட்சி சொல்லக் கூடப் பயந்து கொண்டிருந்த மக்கள், இன்று இந்தச் சங்கங்கள் நடத்தும் போராட்டங்களில் அவர்களுக்குக் கைகொடுக்கத் தயாராக இருக்கிறார்கள். ஆனால் உணர்ச்சிவசப்பட்ட பொதுமக்களும், மாதர் சங்க சமூக சேவகிகளும் சில சமயங்களில் போராட்டங்கள் என்ற பெயரில் வன்முறையில் இறங்குவது வருந்தத் தக்கது. சமீபத்தில் பத்மாவதி வழக்கில் அவளுடைய கணவன் வீட்டாரைப் போலீஸ் கைது செய்த பிறகும் அவர்களுடைய முகத்தில் கரியைப் பூசி ஊர்வலம் விட வேண்டும் என்று ஆர்ப்பாட்டம் செய்து, பொது பஸ்களின் மீது கற்களை எறிந்தார்கள். இதைப் போன்ற சம்பவங்கள் இச்சங்கங்களுக்கு அவப் பெயர் வாங்கிக் கொடுக்கும்.

மாதர் சங்கங்களும், அரசாங்கமும் வரதட்சிணைப் பிரச்சினையைப் பற்றிய பிரசாரங்கள் செய்து விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த முயன்றாலும் ஒருசில பெண்களே இந்தக் கொடுமையை எதிர்த்துச் சமூகத்தில் போராடத் தயாராக இருக்கிறார்கள். மாதம் ரூ. 1100 சம்பாதிக்கும் ஒரு பெண், மேற்கொண்டு சீர் கொண்டு வருவதற்காக மூன்று முறை பிறந்த வீட்டிற்குத் துரத்தி யனுப்பப்பட்டும், மூன்றாம் முறை நாத்தனார் அப்பெண்ணின் ஒரு விரலைத் துண்டித்தும், அந்தப் பெண் பிறந்த வீட்டிலோ, தனியாகவோ வாழ விரும்பவில்லை, வாழ முடியவில்லை என்பது எத்தனை வேதனைக்குரியது!

''கடைசியாச் சேர்ந்த வேலையை எம்பா விட்டுட்டே?''

''ஜுரம் சார்!''

''அடடா! என்ன ஜுரம் உனக்கு?''

''எனக்கில்லே சார்! என் முதலாளிக்கு. என்னைப் பார்க்கும் போதெல்லாம் அவருக்கு ஜுரம் கண்டுடுதாம்!''





# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன**

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |

நான்கு ஆண்டுகளில் 'சுமங்கலி டெபாசிட் திட்டத்தில்' தங்கள் முதலீடு இரட்டிப்பாகிறது ரூ. 5000/ம் அதற்கு மேலும் டெபாசிட் செய்பவர்களுக்கு ஒரு அழகிய 'வெள்ளி குத்து விளக்கு' அன்பளிப்பாக வழங்கப்படும்



# ஜெயசக்தி சிட்ஸ் & பைனான்ஸ் பி. லிட்.

எமது புதிய குருப்புகள்

| மாதங்கள் | அங்கத்தினர்கள் | சந்தா தொகை | சீட்டு மதிப்பு |
|---|---|---|---|
| 40 | 40 | 250 | 10,000 |
| 40 | 40 | 125 | 5,000 |
| 25 | 25 | 2000 | 50,000 |
| 25 | 25 | 1000 | 25,000 |
| 20 | 20 | 500 | 10,000 |
| 20 | 20 | 250 | 5,000 |
| 20 | 20 | 100 | 2,000 |

ஏல முறை: காப்புத் தொகையுடன் பகிரங்க ஏலம்.
'காப்புத் தொகை' ஏலத்தன்றே திருப்பித்தரப்படும்.
முதலீடு செய்ய, சீட்டுகள் சேர, தொடர்பு கொள்க ;

நிர்வாக அலுவலகம் : 39, நடேச ஐயர் தெரு, 2வது மாடி
(சிவா-விஷ்ணு கோயில் அருகில்)
உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-600 017 போன் : 447186

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971
தஞ்சாவூர் : எண் : 2 & 3, முதல் மாடி, தி.எ. களும் ரோடு, தஞ்சாவூர். போன் : 1626
திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன் : 483
பட்டுக்கோட்டை : 9-A, தம்பாரி தெரு, பட்டுக்கோட்டை, போன் : 453

**C.A. BALOO** Managing Director

ஜெயசக்தி — நம்பிக்கைக்கு பெயர் பெற்றது

CHARI

# இலக்கியப் பரிசு 1+½ லட்சம் ரூபாய்



**76** வயதாகும் ஹிந்திக் கவிஞர் திருமதி மகாதேவி வர்மாவுக்கு ஐம்பது நாட்களில் இரண்டு இலக்கியப்பரிசுகள் கிடைத்துள்ளன. மே மாதத்தில்தான் உத்தரப் பிரதேச அரசின் ''பாரத் பாரதி'' விருதினை ஒரு லட்சம் ரூபாய் சன்மானத்துடன் வழங்கினார் பிரதமர் இந்திரா காந்தி. ஜூலை இறுதியில் பாரதிய ஞான பீடப் பரிசான ஒன்றரை லட்ச ரூபாய் இவருக்கு அறிவிக்கப்பட்டுள்ளது.

பரிசு பெறும் நூல் சுமார் 45 ஆண்டுகளுக்கு முன்பு இயற்றிய கவிதைத்-தொகுப்பு. ஆனால் ஐந்தாம் பதிப்பாம். ''யாமா'' (ஜாமங்கள்) என்ற தலைப்புக் கொண்ட இப்பாடல்களுக்குக் கவிஞரே அழகுச் சித்திரங்கள் தீட்டியுள்ளார். இந்தக் கவிதைகள் தத்துவ பாவம் மிக்கவை; இளம் பள்ளிச் சிறுவர் முதல் பட்ட மேற்படிப்பு மாணவரும் பாடமாகப் படித்து வருபவை. ''பொருள் தெரிந்து படிப்பது கொஞ்சம் கஷ்டம்தான்'' என்பது இந்தத் தலைமுறை வாசகர் கருத்து.

ஒரே பெண்ணுதலால் செல்லமாகச் சீராட்டும் செல்வக் குடும்பத்தில் பிறந்தும் சில மாத காலத் திருமண வாழ்வு சிறக்காமல் போன சோகத்தை மாற்ற கவிதையில் இறங்கினார் இளம் மகாதேவி. அலகாபாதில் வாழும் இவர் ஒரு சம்ஸ்கிருத அறிஞர் (எம்.ஏ.) இவரது வசன எழுத்திலும் பேச்சிலும் கூட கவிதை நயம் நிறைந்திருக்கும். கல்லூரி முதல்வராகவும் பல்கலைக் கழகத் துணைத் தலைவராகவும் பதவி வகித்துள்ள இவர் மாதர் பணிகளில் ஈடுபட்டு, சட்ட சபை உறுப்பினராகவும் இருந்திருக்கிறார்.

பரிசு பெற்ற நூலில் மாதிரிக்கு இரு கவிதை அடிகள்:

மகுடியும் நான், அதில் உனது கீதமும் நானே.<br>
உறக்கம் என இருந்தேன்,<br>
அசையா ஜடங்களின் அணு அணுவுள்;<br>
உறக்கம் நீங்கிய என் விழிப்பு,<br>
உலகின் முதல் துடிப்பு!<br>
ஊழிநாளில் எனது இருப்பிடம்<br>
வாழ்வின் அடிச்சுவடே!<br>
உலகத்து உறவுகள் சாபந்தான்,<br>
ஆனால் எனக்கோ அவை வரமாம்!<br>
கரையும் நான், கரையற்ற வெள்ளமும்நான்.

அழிவும் நான் — அளவிலா வளத்தின்<br>
வகையும் நான்;<br>
அனைத்தும் துறக்கும் தியாக ஒளி—<br>
அளவில் ஆசை இருளும் நான்;<br>
இசை ஒலி தந்தியும், இதன் மீட்டலும்,<br>
இதில் எழு கீதமும் நான்;<br>
இந்தக் கிண்ணமும், மதுவும், நாடும் வண்டும்<br>
இனிய மயக்கமும்தான்!<br>
அதரமும் நான், அதிலே<br>
நிலவொளிப் புன்னகையும் நானே!

—தம்பி சீனிவாசன்

# மாறுதல் வரும்

**பு**திய சுஜாதா நாடகம் என்றாலே நாடக உலகில் அனைவரும் பரபரப்புடன் எதிர்பார்க்கும் ஒரு நிகழ்ச்சியாகி விடுகிறது. அப்படி ஓர் ஆவலே அவரது முந்தைய நாடகங்கள் காரணமாக ''மாறுதல் வரும்'' என்ற புதிய முயற்சியும் ஏற்படுத்தியுள்ளது.

நாலு நாடகங்களின் தொகுப்பாகிய இதில் முதல் சிறிய அங்கம் அடுத்து வரும் நாடகங்களுக்கு ஒரு முன்னுரை என்றே கருதலாம். அந்த முன்னுரையையே நாடகமாக்கி ரசமான வசனங்களைத் தந்து, ''நாடக உலகில் மாறுதல் வரும்'' என்கிறார் சுஜாதா. ''வந்தே விட்டது'' என்கிறோம் நாம்!

''வாசல்'' என்ற அடுத்த நாடகத்தில் விருந்தினராக வரும் உறவினரின் குண இயல்பு எத்தனை நுல்லியமாகச் சித்திரிக்கப் படுகிறது! ஜமாய்த்து விடுகிறார் பூர்ணம். எந்த நாடகப் பாத்திரத்தை ஏற்றாலும் இது அவரை மனத்தில் வைத்துக் கொண்டு அவருக்காகவே உருவாக்கப்பட்ட கதாபாத்திரமோ என்று கருதும்படி செய்து விடுகிறார் பூர்ணம்.

மூன்றாவது நாடகமான ''கிருஷ்ணா கிருஷ்ணா'' 'இயந்திர மயமாக்குதலால் வேலை வாய்ப்புக்கள் குறைவதில்லை' என்ற வாதத்தை ஏற்றுக் கொள்கிறது. ஆனால் சோகம், வேலை போய்விடுமோ என்ற அச்சத்தில் இல்லை. யாருமே கவனிக்காது விட்ட வேறு ஒரு துயரம் சுஜாதாவின் கண்களுக்கு மட்டுமே தெரிகிறது. அதை நாடக உருவில் காணும்போது நம் நெஞ்சு கனக்கிறது.

நெ. 4: சிறிய ஊரில் சின்ன ஓட்டலுக்கு வேலை கேட்ட வேளையில் பசியுடன் வந்து முதலாளியின் அனுதாபத்தைப் பெறுகிறான் ஒரு திருடன். நாமோ அந்த அப்பாவி முதலாளிக்கு அனுதாபப்பட்டு உருகுகிறோம்.

முற்றிலும் வித்தியாசமான நாடகங்களை அளித்திருக்கிறார் சுஜாதா. முற்றிலும் வித்தியாசமான முறையில் அரங்கேற்றியுள்ளார் பூர்ணம். ''மாறுதல் வரும்'' என்கிற இந்த ஓரங்க நாடகங்களின் தொகுப்பில் மாறுதலே இல்லாத விஷயங்கள்: சுஜாதாவின் ஆற்றல்; பூர்ணம் குழுவினரின் நடிப்புத் திறன்; ரசிகர்களின் மகிழ்ச்சி. —குட்டிகிருஷ்ணன்

புகைப்படம்: ரங்கேஷ்



அடுத்த இதழில்

சுஜாதா எழுதும்

# மாறுதல் வரும்

புதிய தொடர் நாடகம் ஆரம்பம்






கல்கி

1983 ஆகஸ்டு 14

ருத்ரோத்காரி ஆடி 29

மலர் : 42 இதழ் : 2


தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா
பாரதியார்

# ராஜாஜி சொன்னார், கேட்கவில்லை; ராஜீவ் சொல்கிறார், கேட்பீர்களா?

அஸ்ஸாம், பஞ்சாப், இலங்கை, விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம், மதவெறி, ஜாதிப் பூசல், பிரதேசப் பித்து, தண்ணீர்க் கஷ்டம், லஞ்ச ஊழல் போன்ற பலப்பல பிரச்னைகளால் பாதிக்கப்பட்டுள்ள சராசரி இந்தியனுக்கு,

ஆகஸ்டு 15 சுதந்திர தினம்,

விடுமுறை என்ற ஓர் அற்ப மகிழ்ச்சிக்கு அதிகமாக வேறு என்ன திருப்தியை அளிக்கப் போகிறது?

'36 வருடங்கள் உருண்டோடி விட்டன; நமது பெற்றோரும் முன்னோரும் கனவு கண்ட சுபிட்சம் இந்தியாவில் என்று நிலவப் போகிறது?' என்று விரக்தி வேதனையுடன் அலுத்துக்கொள்கிறோம்.

இந்த நிலை மாற வழி என்ன? நாட்டில் உள்ள அறிஞர் பெருமக்கள் யோசனைகளைக் கேட்டு நடப்பது ஒரு சிறந்த மார்க்கம். எனவே தான் கல்பாக்கம் அணுமின் நிலையத் துவக்க விழாவுக்கு வந்த பிரதமர், இங்குள்ள அறிஞர் பெருமக்களைச் சந்தித்துப் பேசினார் என்று அறிந்த போது மகிழ்ந்தோம்.

பிரதமருக்குப் பக்கத்திலேயே ஓர் அறிவாளி இருக்கிறார். ராஜீவ் காந்தி! அவர் கூறுவதைக் கேட்டாலே போதும், தேசம் முன்னேறத் தொடங்கிவிடும்! சென்னை வந்திருந்த ராஜீவ் பேசிய அர்த்தமுள்ள கருத்துக்களைச் சில மாதங்களுக்கு முன் (5—6—83) கல்கி முதல் பக்கத்தில் தாங்கி வந்தது. மீண்டும் சென்ற மாதக் கடைசியில் அகில இந்திய காங்கிரஸ் (இ) கமிட்டி ஏற்பாடு செய்த ஒரு கருத்தரங்கில் வரி விதிப்புக் கொள்கை பற்றிப் பேசியிருக்கிறார் ராஜீவ். அபரிமித வரிவிதிப்பு எப்படித் தொழிலூக்கத்தையும் உற்பத்தியையும் பாதிக்கிறது, பொருளாதாரத்தைச் சீர்கெடச் செய்கிறது என்று எடுத்துக் காட்டியிருக்கிறார். வரி விதிப்புச் சட்டங்களை எளிமையாக்க வேண்டும் எனவும் கம்பல்ஸரி டெபாஸிட் அர்த்தமற்றதாகி விட்டது எனவும் சொல்லியிருக்கிறார். மத்தியதர, மாதச் சம்பளம் வாங்குகிற மக்கள் குறைவாக வரி செலுத்த வேண்டுமென்பது அரசின் நோக்கமாயினும் அது நிறைவேறுவதில்லை, இவர்களே அதிக வரி செலுத்துகிறார்கள்; மற்றவர்கள் தப்பிக்கிறார்கள் என்பதை விளக்கி யிருக்கிறார். எக்ஸைஸ் வரிகளில் எண்பது சதத்தை அரசாங்கமே செலுத்துகிறது; ஏனெனில் அரசுதான் அதிகமான பண்டங்களை வாங்குகிறது; இதனால் பண வீக்கம் அதிகரிக்கிறது என்பதைப் புரிய வைத்திருக்கிறார். விற்பனை வரிகள் மிக அதிகமாகி விட்டன; ஒரு சிறு வியாபாரி 14 ஃபாரங்களைப் பூர்த்தி செய்ய வேண்டியுள்ளது; இதனாலெல்லாம்தான் லஞ்ச-ஊழல் அதிகரித்து விட்டது என வலியுறுத்தியிருக்கிறார். மரண வரியால் உறவினர் அலைட்டையும் துன்பம், மரணத்தை விடவும் பரிதாபமானது என்று சுட்டிக் காட்டியுள்ளார்.

''ராஜாஜி சொன்னார் கேட்கவில்லை; இப்போது ராஜீவ் சொல்கிறார் கேட்பீர்களா?'' என்று வினவத் தோன்றுகிறது. கூடவே ஓர் ஐயமும் எழுகிறது. இதெல்லாம் நாடகமோ? ஆட்சி மக்களை வதைக்கிறபடி வதைத்துக் கொண்டிருக்க, கட்சி அவர்களுக்காக அனுதாபப்படுவது போல நீலிக் கண்ணீர் விடவேண்டும் என்பது திட்டமோ?

ராஜீவ் சொல்லியும் கேட்கப் போவதில்லை என்றால் காரணம் என்ன? சோஷலிஸம் பேசி மக்களை ஏய்த்தபடியே பெரும் பணம் சேர்க்க இன்றுள்ள பொருளாதாரக் கொள்கைகள் ஆட்சியில் இருப்போருக்கும் தொழில்-வர்த்தக அதிபர்களுக்கும் வழி செய்வதுதான்!

# முந்தானை முடிச்சு

ஏனுங்க! இங்க வாங்கோ. நம்ப நாயத்தைக் கொஞ்சம் கேட்டுப் போட்டுப் பொறவு போங்கோ. பொளுதன்னிக்கும் காட்லே வேலே செஞ்சுப் போட்டேனுங்கோ. நம்ப சின்ராசு வந்தானுங்கோ. மாமா பாக்யராச படம் ஈரோட்ல வந்திருக்குதுபோலா மான்னு கேட்டானுங்கோ. நம்ப ஊர்த் தம்பிப் படமில்லீங்களா? கெரவம் என்ன ஆனாலும் பார்த்துப் போடறதுன்னு பொறப் பட்டேனுங்கோ. எச்சாவே காசு கொடுத்து சீட்டு வாங்கி உள்ளே போய் உக்காந்தோ முங்கோ. என்ற அப்புனு! அட்டகாசங்கோ.

கதைங்களா? நம்ப தம்பிக்கு எப்பவுமே குடும்பக் கதைதானுங்களே. ஒரு வூட்ல மூஞ்சை வுட்டுப் பார்த்துப் போட்டு அந்தக் கதையை மேல மேல ஓட்டி வெட்டி நம்பவிட்டச் சொல்ற மாதிரி இருக்குதுங்கோ. பஸ்ஸ லோர்த்து எறங்குனவுடனே குழந்தை கையைக் காலைக் கழுவி விடுறுரு பாருங்கோ. அந்த முத சீன்லேயே நம்ப தம்பி நம்ம தம்பி தானுங்கோ. எப்பவுமே மூஞ்சை ஏமாந்தா மாதிரி வெச்சிக்கிறதில நம்ப தம்பிக்கு ஈடு ஆருங்கோ? அதிலயும் இப்பலாம் நம்ப தம்பி எம். ஜி. ஆர். அண்ணன் மாதிரி கம்பைச் சுழட்றது என்னு? டிஷூம், டிஷூம்னு குத்த றது என்னு? அட்டகாசமா ரெண்டு கனவு சீன் என்னு? தீபாம்மாவும் சரி, ஊர்வசிம்மாவும் சரி நல்ல டான்ஸுங்கோ. அதிலேயும் அவங்க முக்காவாசி உடம்பைக் காட்டிக்கிட்டு ஆட றப்ப நம்ப கண்ணுசாமி தோட்டத்துச் சரக்கு அடிச்ச மாதிரி இருக்குதுங்கோ. இவங்க ரெண்டு பேருமே சிலுக்கு மாதிரி ஆடுறுங் களே. அப்புறம் நம்ப தம்பி படத்துக்குச் சிலுக்கு எதுக்குங்கோ?

ஏஞ்சாமி? மனகல நிக்கிற மாதிரி ரெண்டு சீனுங்களா? கேனத்தனமா கேக்காதீங்கோ. படம் பூரா அப்படித்தானுங்கோ.

சின்னப் பசங்களைப் பருத்திக் காட்ல அசிங்கமா ஆடவுடறதும், 'பரிமளா, நம்ப அய்யர்பொண்ணு வயசுக்கு வந்திருச்சாம்'னு சொல்ல வக்கறதும் அவ்வளவு நல்லா இல்லீங்கோ.

ஆனா அந்தச் சித்திகிட்டே சூடு போட்டுக் கிட்டு வரான் பாருங்கோ. • அந்தப் பையன் நம்ப தம்பியை மட்டுமா அழ வைக்கிறான். நாங்கூடக் கொஞ்சம் கண்ணு கலங்கிட்டே னுங்கோ.

பாட்டுங்களா? வெவரங் கெட்டதனமாக் கேக்காதீங்கோ. அதான் பொழுது விடிஞ் சாலே டீக்கடை டீக்கடையா டேப்ல இந்தப் படத்துப் பாட்டுத்தானுங்களே கேக்குது. நம்ப வாய்க்கா மேட்டுக்கு வர பஸ்ஸுகூட இந்தப் படத்துப் பாட்டுத்தானுங்கோ.

நம்ப தம்பி கதை சொல்றதுல நல்ல வெவரமான ஆளுங்கோ. அதுவும் கடைசில பாருங்கோ. ஓலப்பாளையத்தா கருத்தடை ஆப்பரேசன் பண்ணிக்க சிறுவலூருக்குப் போயிடுறுங்கோ. நம்ப தம்பி ஆசை ஆசையாப் பூ வாங்கிட்டு 'சாந்தி'க்கு நாள் பாத்துட்டு வராருங்கோ. அப்புறந்தான் அவருக்கு விசயம் தெரியுதுங்கோ. மனார்னு வண்டி கட்டிட்டு சிறுவலூருக்கு ஓடுறுங்கோ. வளியில ஒருசன்னடை. என்ன ஆயிடு மோன்னு மனசைப் போட்டு அல்லாட வெச்சுடுறுருங்கோ.

ஏனுங்க? என்ன ஆவுதுங்களா? அதை நான் சொல்லுவேனுங்களா? ராத்திரி ஆட்டத்துக்கு நானும் அம்மணியும் எங்க ஒறம் பொறைக் கூட்டமும் மறுக்கா போவப் போறேமுங்க. வாங்களேன். நீங்களும் நம்ப ஊட்லயே சாப்ட்டுப்போட்டுப் படத் துக்குப் போவலாம்.





# ஆயிரம் நிலவே வா

டுமீல்! டுமீல்! டுமீல்!

இன்னொரு பணக்காரன் அவுட்.

டிர்ர்ரக், டிர்ர்ர்ரக், டிர்ரக்!

'ஹலோ! போலீஸ்? நான்தான் கொன்றேன். உங்களால் என்னைப் பிடிக்க முடியாது. ஹஹ்ஹஹ்ஹா'

கொசு அடிக்கிற மாதிரி ஒரு கொலை, இரண்டு கொலை, மூன்று கொலை... என்று செய்துவிட்டு நாயகன் தப்பிக்கிறான். அவனைத் தூரத்து தூரத்து என்று யாரோ தூரத்துகிறார்களாம். — (முடிவில் மனச் சாட்சியாம்) இப்படியே பதினறு வாரங்களுக்கு மயிர்க்கூச்செறியும் (!) கதை'எழுதுகிற கதாசிரியர்—கம்— ஏழை மானேஜர் கார்த்திக்கின் ஆயிரமாயிரம் ஏமாந்த வாசகர்களில் ஒருவர் கலக்ஷ்ணு என்று ஆரம்பிக்கிறது படம்.

கார்த்திக்கிற்கு இரட்டை வேடம். வழக்கமான கெட்ட அண்ணன், நல்ல தம்பி. சாதுவை விட அந்த 'எப்டி, எப்டி' கொஞ்சம் தேவலாம். அண்ணனைக் கொன்று விட்டதாய் எண்ணிக் கொண்டு அவனைப் போல் நடிக்கிறன் தம்பி. தம்பியைக் காதலிக்கும் நாயகி அது தம்பி என்று நம்பத் தயாராயில்லை. நல்ல சஸ்பென்ஸ¬ம் விறுவிறுப்புமாய்க் கொடுத்திருக்கலாம்தான். ஆனல் பேராசிரியர் பிரகாசத்தின் கையில் சிக்கிக்கொண்டு கதை ஐயோ ஐயோ என்று கதறித் துடிக்கிறது.

விட்ட இடத்தைப் பிடிக்கக் கார்த்திக் முயற்சி செய்திருக்கிறர்.

இடைவேளை வரை கலக்ஷணவை நன்றாய் உரித்திருக்கிறர்கள். நடிப்பில் அல்ல. உடையில். இடைவேளைக்கப்புறம் இருக்கவே இருக்கிறர் 'லோலா' சிலுக்கு. வழக்கமான டான்ஸ். கூடுதலாய்க் கார்த்திக்கைக் கட்டில் கசக்கோ, கசக்கென்று — ச்சே.

ரொம்ப நாளைக்கப்புறம் நாகேஷைப் பார்த்ததும் ஆசையோடு நிமிர்ந்து உட்காருகிறோம். சதக்! ஒரே குத்தில் நம்மையும் நாகேஷையும் டைரக்டர் சாய்த்து விடுகிறர்.

இளையராஜாவுக்கும் இளைப்பாறுதல் நேரம் போலும். (சங்கர்-கணேஷின் வாடையே வீசுகிற தென்றல் பார்த்துக் கொள்ளுங்களேன்.)

விறுவிறுப்பாய் இல்லா விட்டாலும் படம் கடகடவென முடிந்து விடுவது ஓர் ஆறுதலான விஷயம்தான்.

பூரண அமாவாசையானதால் ஆயிரம் நிலவை அழைத்திருக்கிறர்களோ?

-ஜெய மன்மதன்

''ஏதுக்குங்க உங்க மனைவி காலங் கார்த்தாலே எழுந்து அவசரம் அவசரமா வீடு கூட்டறுங்க? வேலைக்காரி வந்தபின் அவளைப் பெருக்கச் சொல்லக் கூடாதோ?''

''வேலைக்காரி வந்ததும் 'சனியன் பிடித்த வீட்டில் குப்பையைப் பார்'னு திட்டுவாளே அதைத் தவிர்க்கத்தான்.''

—பி. ஆர்.கே.

# நேசமுள்ள வான்சுடரே

**'ஒரு தடவை காதலித்து வேதனைகளை உணர்ந்தவளால் இந்த உலகத்தைச் சுலபமாகச் சமாளிக்க முடியும்.'**

**18**

**ம**துரை மருத்துவ மனையில் ராம்குமார் மூடிப்போன கண்களுடன் நினைவிழந்து கிடந்தான். தலை, கால், கை, உடம்பு நிறைய வரி வரியாக 'பாண்டேஜ்' சுற்றுக்கள். புதிய இரத்தம் அவன் உடலுக்குள் சொட்டுச் சொட்டாக ஏறிக் கொண்டிருந்தது. விலா எலும்புகளில் சில முறிந்திருந்ததால் சுவாசத் திணறல். மானிட்டர் திரை இதயத்தின் இயக்கத்தை ஈ.சி. ஜி. அலைகளாக வரைந்து காண்பித்தது.

தலைக் காயத்துக்காக மூன்றாவது முறையாக எடுக்கப்பட்ட எக்ஸ்ரே படத்தை வெளிச்சத்துக்கு நேராகப் பிடித்துப் பார்த்த டாக்டர், பக்கத்தில் வேதனையால் வீங்கிய முகத்துடன் நின்ற பத்மாவைத் திருப்திப் படுத்துவதற்காக 'We will see' என்று சொல்லிவிட்டு நகர்ந்தார்.

பத்மா 'நார்மல் கன்ஸம்ப்ஷன்' காண்பித்த ஆக்ஸிஜன் டயலையே வெறித்தாள். இரவெல்லாம் அவள் உறங்காமல் அழுதிருந்ததால் அவள் விழிகள் சிவந்திருந்தன.

வராந்தாவில் கவலை கப்பிய முகத்துடன் காத்திருந்த ராமின் பெற்றோர், வார்டுக்குள்ளிருந்து வெளியே வந்த பத்மாவின் முகத்தை நல்ல செய்திக்காக ஏறிட்டுப் பார்த்தனர்.

பத்மா எதுவும் சொல்லும் நிலையில் இல்லை. நின்று நின்று கால் கடுத்ததால் பெஞ்சின் ஓரத்தில் அமர்ந்தாள். குளிக்காமல், உடை மாற்றிக்கொள்ளாமல்கசகசவென்றவியர்வை கலந்த அசௌகரியம், கண்ணீரைத்துடைக்கக் கைப் பையைத் திறந்து ஈரக்கைக்குட்டையை எடுத்தாள். உள்ளே பிரிக்கப்படாத ஓர் இன்லாண்ட் லெட்டர். முன் தினம் கொடைக்கானலிலிருந்து வாரிச் சுருட்டிக் கொண்டு ஆம்புலன்சில் புறப்பட்டபோது சமையற்காரி கொண்டு வந்து கொடுத்தது. பிரித்தாள். சித்தப்பா அநேக ஆசீர்வாதங்களுடன் எழுதிய கடிதம்.

'...உன் கல்யாணத்துக்கு இப்போது ஒன்றும் அவசரமில்லை. தாய் தந்தை இல்லாமல் கிராமத்தில் நின்ற உன்னைச் சென்னைக்கு அழைத்து வந்து வளர்த்துப் படிக்க வைத்த எங்களுக்கு உன் கல்யாணத்தை எப்போது நடத்தி வைக்க வேண்டும் என்பது தெரியாதா? இன்னும் இரண்டு மூன்று வருஷங்கள் டாக்டர் தொழிலை நல்ல முறையில் செய். நாங்களே ஒரு நல்ல வரனைத் தேர்ந்தெடுக்கும் வரை அவசரப்படாமல் பொறுமையாக இரு. உலகம் மிகவும் பொல்லாதது. யாரிடமும் ஏமாந்து விடாதே. நீ குறிப்பிடும் ராம்குமாரின் பெற்றோரை நாங்கள் தற்சமயம் சாந்தோமிற்குப்போய்ப் பார்ப்பதாக இல்லை. அவர்கள் எங்களிடம் பெண் கேட்டு வந்தால் என் மகள் கல்யாணத்துக்கு இப்போது ஒன்றும் அவசரமில்லை என்று சொல்லிவிடப் போகிறோம். சம்பளத்தை எம். ஓ. மூலமாக அனுப்பினால் கமிஷன் அதிகமாகும். எனவே பாங்க் டிராஃப்ட் வாங்கி....'



வார்டுக்குள் ஒரு ஸிஸ்டர் பரபரப்புடன் அங்குமிங்குமாக ஓடுவதைப்பார்த்து விட்டுப் பத்மா எழுந்து உள்ளே போனாள். நர்ஸ் டாக்டரை அழைத்து வந்து மானிட்டர் திரையைக் காண்பித்தாள். அதில் நீளமான கோடு மட்டுமே தெரிந்தது. இதயம் இயங்க வில்லை என்பதைத் தெரிவித்தது.

"Watch out the oxygen.. stop transfusion" என்ற டாக்டர் ராமின் மார்பைப் பிசைந்து கார்டியாக் மஸாஜ் செய்தார். ''ஸ்டாஃப், இன்ட்ரா கார்டியாக் அட்ரீனலின் லோட் பண்ணுங்க சீக்கிரம்.''

வெளியே இருந்த ராமின் பெற்றோர் உள்ளே வந்து விட்டனர். நேராக ராமின் இதயத்துக்குள் ஒரு நீள ஊசியை இறக்கிய டாக்டர் Monitor leads களையும் ஆக்ஸிஜன் ட்யூப்களையும் சரி செய்து பார்த்தார். பத்மாவின் அழுகை வார்டுக்குள் வெடித்துச் சிதற மற்ற நோயாளிகளின் உறவினர்கள் ஓடிவந்து கூட்டம் போட்டு அசைவற்றுக் கிடந்த ராமைப் பார்த்தனர்.

ராம் உதட்டில் சின்னப் புன்னகையை வைத்துக் கொண்டு கனவுகள் தொல்லை தராத நிரந்தரத் துயிலில் அமிழ்ந்துவிட்டான்.

பல வருடங்களுக்கு முன் மருத்துவக் கல்லூரியில் இடம் பிடிப்பதற்காகப் பத்மா இண்டர்வியூ வரிசையில் காத்திருந்தபோது ராம்குமாரை முதன் முதலாகச் சந்தித்த சம்பவம் அவள் நினைவுக்கு வந்தது. 'எக்ஸ்யூஸ் மீ, லாக்டோ மீட்டர்னா என்ன மேடம்?' என்ற அவனுடைய முதல் கேள்வி நேற்றுக் கேட்ட மாதிரி அவள் செவிகளுக்குள் தெளிவாக ஒலித்தது.

அடுத்த ஒரு வருட காலம் பத்மாவின் வாழ்க்கை மிகவும் சுவையற்றதாகக் கழிந்தது.

கொடைக்கானல் வேலையை உடனடியாக ராஜிநாமாச் செய்தாள். ராமின் பெற்றோர் அவளைத் தங்களுடன் சென்னைக்கு அழைத்துச் சென்றனர். சாந்தோம் பங்களாவில் தங்களுடன் வசிக்கும்படி மிகவும் கெஞ்சிக் கேட்டனர். பத்மா முழு மனத்தோடு ஒத்துக்கொண்டாள். மகனை நினைத்துப் பெற்றோர் கண்ணீர் விட்ட நேரங்களில் பத்மா அவர்களுக்கு ஆறுதல் சொன்னாள். ராமை நினைத்து பத்மா மாடி அறையின் தனிமையில் தேம்பிய சமயங்களில் ராமின் பெற்றோர் அவளுக்கு ஆறுதல் சொன்னார்கள்.

அடிபட்டவர்கள் ஒருவருக் கொருவர் ஒத்தடம் கொடுத்துக் கொள்வதைப் போல் ஒருவருக்கொருவர் ஆறுதல் சொல்லிக் கொண்டு, சமயங்களில் யாருக்கு யார் ஆறுதல் சொல்வது என்பதறியாமல் தவித்தனர். பெரியவர்கள் மகனின் பிரிவை மறக்க வேண்டும் என்பதற்காக அவர்கள் முன்னால் பத்மா சிரமத்துடன் சந்தோஷ முகம் காண்பித்தாள். ராமின் பிரிவைப் பத்மா மறந்து புதிய வாழ்வைத் தொடங்க வேண்டும் என்பதற்காக அவள் முன்னிலையில் பெரியவர்கள் கலகலப்பாகப் பேசிக் கொண்டார்கள்.

சித்தியும் சித்தப்பாவும் ஒரு நாள் காலை சாந்தோம் பங்களாவுக்கு வந்தனர். பத்மாவைத் தங்களுடன் வந்துவிடுமாறு அழைத்தனர். பத்மா அவர்களுடன் புறப்பட்டபோது ராமின் தாய், ''இந்த வீட்டுக் கதவு உனக்காக எப்போதும் திறந்திருக்கும்மா'' என்றாள்.

ஆயிரம் விளக்கிற்குச் சென்ற பத்மா சித்தி வீட்டில் ஒரே வாரம்தான் இருந்தாள். தனிமை உணர்வு பாலைவன நெருப்புக் காற்றாய்அவள்இதயத்தைச்சுற்றிச்சுழன்றடித்தது. சித்தி ஒரு நாள், 'இப்படி வந்து என்னைத் தொட்டுப் பாரம்மா, ஜுரம் காயுது. மருந்து எதினாச்சும் எழுதிக் குடு' என்றாள். பத்மா, 'டாக்டர் யார் கிட்டயாவது காண்பியுங்க சித்தி' என்றாள். 'நீ டாக்டர் இல்லையா?' என்று சித்தி கேட்டாள். 'இல்லே' என்ற பத்மா 'என் ராம்குமார் உயிரைக் காப்பாத்தாத வைத்தியத் தொழில் எனக்குத் தேவையில்லை' என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள். சித்தப்பா மறுபடியும் கிளினிக் ஆரம்பிக்கும் திட்டம் பற்றிப் பேச ஆரம்பித்தார். 'மன்னிச்சுக்கோங்க சித்தப்பா. நான் டாக்டர் தொழில் பார்க்கறதா இல்லே' என்றாள். 'அப்புறம் எப்படிச் சாப்பிடறதாம்?'' என்றார் சித்தப்பா. பத்மா பதில் பேசவில்லை. ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு அந்த வீட்டுப் படிகளிலிருந்து சூட்கேசுடன் இறங்கி நடை பாதையில் நடந்தாள்.

சாந்தோம் பங்களா அவளை இன்முகத்துடன் வரவேற்றது. பகலில் மனத்தை ஒருமுனைப்படுத்திப் புத்தகங்கள் வாசித்தாள். இரவில் தலையணையைக் கண்ணீரால் ஊற வைத்தாள். ஹாங்கரில் அவனுடைய 'ஸ்டெத்' அனாதையாக அசைவற்றுத் தொங்கியது.

ஒரூரில் இன்ஜினீயராக இருக்கும் ராமின் பெரியப்பா பிள்ளை வசந்த் இரண்டு மாத விடுப்புக்கு அங்கே வந்து தங்கினான். பெரியவர்களின் அழைப்பின் பேரில்தான் அவன் அங்கே வந்தான் என்பது பத்மாவுக்குத் தெரியாது.



''நீங்க எடுக்கப் போகும் ''மூன்று தலைமுறை'' படத்தில் கதாநாயகியாக நடிக்கிறேன் சரி, பாட்டியாகவும் நடிக்கணும்கிறீங்களேஎப்படிஸார் முடியும்?''

''ரொம்ப சிம்பிள். பல் செட்டைக் கழட்டிட்டாப் போதும்!''

—ஆர். கோபாலன்



மாடியில் பத்மாவுடன் வசந்த் பேசிப் பழகச்சந்தர்ப்பங்களைப் பெரியவர்கள் நிறைய ஏற்படுத்திக் கொடுத்துவிட்டு ஒதுங்கிக்-கொண்டனர். வசந்த் நிறைய ஜோக்அடித்துப் பத்மாவின் பல் வரிசையைப் பார்க்கும் முயற்சியில் படுதோல்வி அடைந்தான். ராமின் அப்பாவின் உத்தரவுப்படி, பத்மா பொழுது போவதற்காக மாலை நேரங்களில் கடற்கரைச் சாலையில் காரோட்ட வசந்திடம் கற்றுக் கொண்டாள்.

வசந்தின் விடுமுறை முடிந்தது. அவன் புறப்படும் தினத்தன்று விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ராமின் மறைவுக்குப் பிறகு அந்த வீட்டில் நடக்கும் முதல் விருந்து. ராமின் பெற்றோர், பத்மா, வசந்த் நால்வரும் ஒன்றாக அமர்ந்தனர். வசந்தின் மனம் புண்படக் கூடாது என்பதற்காகப் பத்மாசாப்பிட்ட மாதிரி பெயர் பண்ணினாள்.

வசந்த் விடைபெற்று வெளியேறிய பிறகு ராமின் அம்மா மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள்.

''எத்தனை நாளைக்கம்மா இப்படியே இருக்கலாம்னு நினைக்கிறே?''

''நீங்க என்ன கேக்கறீங்கன்னு எனக்குப் புரியுதும்மா. ஆயுசு பூராவும் நான் தனியாகவே வாழணும்கிறது தெய்வத்தோட ஆசை. தனிமையைத் தாங்கிக்கிற சக்தியையும் தெய்வம் எனக்குக் குடுத்திருக்கு. எந்த அதிர்ச்சியையும் என்னால தாங்கிக்க முடியும். எந்த வேதனையும் இனிமே என்னைப் பாதிக்காது'' என்ற பத்மா 'ஒரு தடவை காதலிச்சு வேதனைகளை உணர்ந்தவளால் இந்த உலகத்தைச் கலபமாகச் சமாளிக்க முடியும்' என்று மனத்தினுள் சொல்லிக் கொண்டாள்.

''நீ எப்பவும் சந்தோஷமா இருக்கணுங்கறதுதான் எங்க ஆசை'' என்றார் ராமின் அப்பா.

''ஒரு பெண் கல்யாணம் பண்ணிக்கிட்டாத்தான் சந்தோஷமா இருக்க முடியும்னு நான் நினைக்கல்லே அங்கிள்.''

உடனே அவர், ''எல்லோருமே உன்னை மாதிரி இறந்த காலத்துக்குள்ளேயே முடங்கிக்கிட்டிருந்தா உலகம் என்னம்மா ஆகும்? யோசிச்சுப் பாரு. நடந்ததை மறந்துட்டு இறந்த காலத்தை விட்டுட்டு வெளியே வா. உனக்குன்னு ஒரு வாழ்க்கை காத்திருக்கு. நல்ல வரனாகப் பார்த்து உனக்குக் கல்யாணத்தை நடத்தி வைக்க வேண்டியது எங்க பொறுப்பு என்றார்.''

''ஸாரி அங்கிள். இறந்த காலத்தை விட்டு நான் வெளில வரணும்னா ராம் மறுபடியும் பிறந்து வரணும்'' என்றவள், 'உங்க அறிவுரைகளை என் மூளை ஏத்துக்குது. ஆனா இருதயத்தாலே ஜீரணிக்க முடியலயே' என்று எண்ணிக் கொண்டாள்.

''ராம் போலவே உனக்கு இன்னொரு ராம் கிடைச்சா?''' என்றார் அப்பா.

''என் முடிவை மாத்திக்க நான் தயார். ராம் மாதிரி இன்னொரு ராம் எங்கே கிடைப்பார்?''

''ஏம்மா கிடைக்க மாட்டான்? எல்லாம் மனசுதாம்மா காரணம். வசந்த் ராமைவிட வளர்த்தியா, சிவப்பா இல்லியா? ராமைப் போலவே இவனும் உன்கிட்டே அன்பாகத் தான் பழகுறான். படிப்பில் ராமை விட வசந்த் எந்த வகையில குறைஞ்சவன்? அவன் டாக்டர், இவன் இன்ஜினியர். வேற என்ன வித்தியாசம் சொல்லு?'' என்றாள் அம்மா.

''ஒரே ஒரு வித்தியாசம்.''

''என்ன வித்தியாசம்?'' என்றார் அப்பா.

''வானத்து நட்சத்திரத்துக்கும் மத்-தாப்புப் பொறிக்கும் உள்ள வித்தியாசம். தயவு செய்து ராமை யாரோடயும் கம்பேர் பண்ணாதீங்க. அதுமட்டுமல்ல அங்கிள். வசந்த் அடிவானத்துச் சூரியன். நான் உச்சி வானத்தைக் கடந்து விட்ட சூரியன். ரெண்டு பேரும் ஒரே கோணத்தில் உலகத்தைப் பார்க்க முடியாது'' என்றாள். எழுந்து மாடிக்குச்சென்றாள். சூட்கேஸிலிருந்து 'பெய்லி அண்ட் லவ்' புத்தகத்தை எடுத்துப் பிரித்தாள். முதல் பக்கத்தில் ஒட்டப் பட்டிருந்த ராமின் படத்தைப் பார்த்தாள். 'ராம் மௌனத்தில் பேசிடுவோம்' என்று ஏற்கனவே எழுதி வைத்திருந்ததற்குக் கீழே 'மரணத்தில் கூடிடுவோம்' என்று எழுதி கலீல் ஜிப்ரானின் கவிதையைப் பூர்த்தி செய்தாள். நீண்ட நாட்களாகத் தொடாத 'ஸ்டெத்'தை எடுத்துத் துடைத்தாள்.

மறுநாள் காலை. ஐந்து மணி.

பத்மா முதல் முதலாகத் தனியாகக் காரை வெளியே எடுத்தாள்.

கடற்கரைச் சாலையில் படுவேகமாக விரட்டி இடமாக ஒடித்தாள். குளிர்க் காற்று முகத்தில் மோதியது. தெளிவாகவும் கறு கறுப்பாகவும் விடிந்து கொண்டிருந்த வேளையில் மருத்துவக் கல்லூரியின் விடுதி முன்னே வேப்ப மரத்தடியில் காரை நிறுத்தி இறங்கினாள். அதே இடத்தில் ராமும் அவளும் எண்ணற்ற முறை சந்தித்து மணிக் கணக்கில் பேசிக் கொண்டிருந்திருக்கின்றனர்.

விடுதிக் கட்டிடத்தின் உடம்பில் சதுரம் சதுரமாக ஜன்னல்கள் வெளிச்சங்கள். இப்போது இந்த விடுதியில் முக்கால்வாசிப் பேர் புது முகங்களாக இருப்பார்கள். டெய்சியும் கப்பையாவும் டென்னிஸ் ஆடிய காலி மைதானத்தைப் பார்த்தாள். மாமரத்தின் அடர்த்திக்குள்ளிருந்து ஒரு குயில்



தக்காளிப் பழம் இப்போது அதிக விலை விற்கிறது. தக்காளிப் பழம் அழுகிப் போகாமல் இருக்க இதோ ஒரு யோசனை. தக்காளிப் பழத்தின் நுனியில் சிறிதளவு மெழுகைத் தடவி வையுங்கள். விரைவில் அழுகாமல் அவைகளைப் பாதுகாக்கலாம்.

—நெல்லை சுவாதி.



# அமரர் கல்கி

## நினைவுச் சிறுகதைப் போட்டி 1993

**பிரசுரத்துக்கு ஏற்கப்பட்டுள்ள சிறுகதைகள்:**

1. காண்டக்ட் சர்ட்டிபிகேட்
''பரஞ்சோதி'' ஜி. பாலசுப்பிரமணியன்

2. உயிருக்கும் விலை உண்டு
அண்ணாதாசன்

3. சில நியாயங்கள் தனியானவை
ஜி. சத்தியகிரிராஜன்

4. அஸ்வமேத யாகம்
பிரதிபா ராஜகோபாலன்

5. இதுதான் வாழ்க்கை நியதி
நோ பென்னட்

6. பேதங்கள்
ரேவதி பாலு

7. இன்று போய் நாளை வா
சுபா

8. ஆயிரம் ரூபாய் பரிசு
பாலுகிருஷ்ணன்

9. உணர்வுகள் உறங்கட்டும்
விநோதானந்த்

10. நேர்மையின் அவதி
திருவள்ளூர் பார்த்தசாரதி (அறிமுக எழுத்தாளர்)

11. இங்கே ஒரு கல்யாணம் நடக்கிறது
ஜி. நாராயணன்

12. அசாதாரணத்தைத் தேடி
ஜெ. ஜெயமாலா

13. முரண்பாடுகள்
அ. குமார்

14. நாளைய நிகழ்ச்சிகள்
பாமாகோபாலன்

15. வேறு வழியே இல்லையா?
சந்துரு (ஐ. ராமச்சந்திரன்)

16. ஊர்வலம்
ஜெனமேஜெயன்

'க்வோக் க்வோக்' என்று தனியாகக் குரல் எழுப்பிக் கொண்டிருந்தது. தினமும் என்னை எழுப்பிய அதே குயிலா? அல்லது புதிய குயிலா? மெஸ்ஸிலிருந்து சமையல் புகை எழும்பியது.

இந்த விடுதியின் ஓரத்து அறைக்குள்ளே ஒரு கையில் புத்தகத்தையும் இன்னொரு கையில் மனித எலும்பையும் பிடித்துக் கொண்டு படித்த இனிய நாட்கள் நினைவுக்கு வந்தன. ராமிற்காக என்னை அலங்கரித்துக் கொண்டு எத்தனை முறை இந்த வழியில் நடந்திருக்கிறேன்! மௌனமாகச் சில நிமிடங்கள் நின்றாள்.

காதலிப்பவர்கள் இருவரும் மணந்து கொண்டு குழந்தைகளைப் பெற்று வாழ்ந்தால்தான் காதலில் வெற்றியா? இல்லை நிச்சயமாக இல்லை. பிரிவில்தான் நிஜமான வெற்றியை அனுபவிக்க முடிகிறது. இந்தப் பிரிவில்தான் எத்தனை சுகம்! எத்தனை புனித எண்ணங்கள், பசுமை நினைவுகள்! எனக்கு இந்த நினைவுகளே போதும்.

**மே**ற்கு வானம் காவியணிந்து துறவுக் கோலம் காண்பித்த வேளையில் தூய 'பனி வெண்மையில்' டெரீன் புடவையும் பிளவுசும் அணிந்த பத்மா விமான நிலையத்தில் லவுஞ்சில் ராமின் பெற்றோரிடம் விடை பெற்றாள்.

''நைட் மதுரையில எங்கேம்மா தங்குவே?''

''என்னோட படிச்ச டெய்சியும் சப்பையாவும் பிராக்டிஸ் பண்றாங்க. அவுங்க வீட்ல ஸ்டே பண்ணிட்டு நாளைக்கு விடியற நேரத்துல மலைக்குப் புறப்படுவேன்.''

''பாரு. கொடைக்கானல் பிடிக்கலேன்னு வந்துரு. சாந்தோம்ல ஒரு கிளினிக்கை ஆரம்பிச்சிடு. உனக்கு எல்லா வசதிகளையும் நாங்க பண்ணித் தரோம்.''

''இல்லே அங்கிள். ராம் வேலை பார்த்த அதே ஆஸ்பிட்டல்லே. அவர் நினைவுகளோட வாழ்ந்து ஏழைகளுக்கு என்னால் முடிஞ்சதை ஆயுசு பூராவும் செய்யலாம்னு முடிவு பண்ணிட்டேன். அதுல எந்த மாற்றத்துக்கும் இனிமே இடமில்லே. நீங்க கொடைக்கானல் வந்தா தெரியப்படுத்துங்க.''

இருட்டிய பிறகு விமானம் சென்னைத் தாமநத்திற்குப் பிறகு. 'ரன்வே'யின் ஓரங்களில் குறிஞ்சிமலர்களைப் போல் பூத்திருந்த நீல மின் விளக்குகளுக்கிடையே பக்குவமாக ஓடியது. சில நொடிகளில் மேகங்களுக்கு மேலே மிதந்தது.

பத்மா 'ஸீட் பெல்ட்'த் தளர்த்தி விட்டு விட்டு விமானத்தின் ஜன்னல் ஷட்டரை மேலேற்றினாள். வாரி இறைக்கப் பட்டிருந்த நட்சத்திரங்களுக்கு இடையே வானத்தின் கோடியில் மிகவும் பிரகாசமான ஒரு நட்சத்திரம் அவள் வரவுக்காகவே காத்திருப்பதைப் போல சுடர் வெட்டிக் கொண்டிருந்தது.

(முற்றும்)

நன்றி: இத்தொடரினை எழுத எனக்கு உறுதுணையாகவிருந்த டாக்டர் எஸ். அமுதகுமார் எம். பி. பி. எஸ். அவர்கட்கு.

—சவீதா

# விடாக் கொடாக் கண்டன்

(சமீபத்தில் சென்னை வந்திருந்த முன்னாள் சட்ட மந்திரியும், தற்போது பாரதீய ஜனதா கட்சியின் பொருளாளருமான திரு. சாந்தி பூஷண் அவர்களைச் சந்தித்த போது பழைய சம்பவம் ஒன்றைக் கூறினார்)

1977-ம் வருடம் மே மாதம். தேர்தல் விதிகள் சீர்திருத்தம் சம்பந்தமாக ஜனதா மந்திரி சபையின் துணைக் குழு கூடியது. சட்ட மந்திரி சாந்தி பூஷண் மற்றும் இரு மந்திரிகள், அதிகாரிகள் எல்லோரும் குறிப்பிட்ட நேரத்துக்கு வந்து, ஒருவருக்காகக் காத்திருந்தனர். எதிர்பார்க்கப்பட்ட மந்திரி பத்து நிமிஷம் தாமதமாக வந்தார். காத்திருந்தவர்களிடம், ''ஸாரி, பத்து நிமிடம் தாமதமாகி விட்டது'' என்றார். ''பரவாயில்லை'' என்றனர் மற்றவர்கள். பிறகு தாமதமாக வந்தவர் சொன்னார்:

''நான் கிளம்பும்போது ஒரு பத்திரிகையாளர் என்னைச் சந்தித்தார். 'உங்களுக்குப் பிரதமராக ஆசை இருக்கிறதா' என்று கேட்டார்; எனக்கு மிகக் கோபமாக வந்தது. 'இந்த நாட்டின் பிரதமராக நான் வரவேண்டும் என்று விதி இருந்தால் வந்துதான் தீருவேன்' என்றேன். நான் ஏன் பிரதமராக வரக் கூடாது?'' என்றார் மீண்டும். மற்ற மந்திரிகள் ஒருவரை யொருவர் முகம்பார்க்க, ஒரு மந்திரி மட்டும், ''நீங்கள் சொன்னதில் தவறேதும் இல்லையே'' என்றார்.

தாமதமாக வந்த மந்திரி மீண்டும் சொன்னார்! ''யாரையும் அகற்றி விட்டுப் பிரதமராக வரவேண்டும் என்ற எண்ணம் எனக்கு இல்லை. மொரார்ஜி அவர்கள் இறந்த பிறகு பிரதமர் பதவி என்னைத் தேடி வரும்.''

மற்ற மந்திரிகள் திடுக்கிட்டார்கள். இவ்வளவு கேவலமான எண்ணமா இவருக்கு என்று எண்ணி வருத்தப்பட்டார்கள்.

தாமதமாக வந்த அந்த மந்திரி பின்னாளில் தமது பதவி வெறிக்காக ஜனதா கட்சியை உடைத்துப் பிரதமரான சரண்சிங்தான்.

அந்தத் துணைக் குழுக் கூட்டம் முடிந்த அன்று மாலை சட்ட மந்திரி சாந்தி பூஷண் பிரதமர் மொரார்ஜியைச் சந்திக்க வேண்டியிருந்தது. சாந்தி பூஷண் பேச்சோடு பேச்சாக மொரார்ஜியிடம் ''சரண்சிங்கிற்குப் பிரதமராக வேண்டும் என்ற ஆசை இருக்கிறது. ஆனால் யாரையும் அகற்றிவிட்டு வர அவருக்கு விருப்பமில்லையாம். பின்னால் ஒரு காலத்தில் பிரதமர் பதவி காலியானால் அவர் வரமுடியும் என்று கருதுகிறார்'' என்றார்.

அதைக் கேட்ட புத்திசாலியான மொரார்ஜி: ''சரி; எனக்கு முன்னரே இவர் இறந்து போனால் எப்படி?'' என்றாராம்! இதைக் கேட்ட சாந்தி பூஷண் அதிர்ந்து போனார்.

மொரார்ஜி தொடர்ந்தார்: ''கோவிந்த வல்லப பந்த், சர்தார் வல்லபாய் பட்டேல் போன்றோர் 76 வயதில் மரணம் அடைந்தார்கள். இப்போது சரண் சிங்குக்கு 76 வயது ஆகிறது'' என்று கூறிவிட்டு, சாந்தி பூஷணைப் பார்த்தாராம்.

'சே! ஒருவரை யொருவர் எப்போது இறப்பார்கள் என்று கூறிக்கொள்ளும் இந்தத் தலைவர்கள் இருக்கும் வரை நாடு எப்படி உருப்படப் போகிறது' என்று மனம் நொந்தார் சாந்தி பூஷண்.

சந்திப்பு: நமது நிருபர்

-கார்ட்டூன் நடனம்





## 2

"சாந்தி! திஸ் இஸ் கௌரி... டாக்டர் ஆபரேஷன் முடிஞ்சி வந்தாச்சா?"

"குட்மார்னிங் மேடம்... டாக்டர் வர்ற நேரம்தான். வந்ததும் வீட்டுக்குக் கனெக்ஷன் கொடுக்கட்டுமா?"

"தேவையில்லே... நான்அப்புறமா அவர் கிட்டப் பேசிக்கிறேன். ம்ம்... பிஃபோர் ஐ பர்கெட்... திண்டிவனத்துலேந்து மிஸஸ் அண்ணாமலை போன் பண்ணுனாங்க... ராத்திரி நேரங்கள்ல கண் விழிச்சி அப்பப்ப கணவரைத் திறமையாக் கவனிக்க முடியலே யாம். ஒரு 'நைட் நர்ஸ் ஏற்பாடு பண்ண முடியுமான்னு கேட்டாங்க. யாரைச் சொல்றேன்னு புரியுதா சாந்தி?"

"எஸ் மேடம். மூணு வாரம் முன்னால ஹெர்னியா ஆபரேஷன் செய்துகிட்ட திண்டிவனம் லாண்ட் லார்ட்...."

"அவரேதான். டாக்டர் கிட்டப் பேசப் பயந்துக்கிட்டு அந்தம்மா வீட்டுலே கூப்பிட்



# மாலையில் பூக்கும் மலர்கள்

டாங்க.... நர்ஸஸ் அஸோஸியேஷனுக்குப் போன் பண்ணி வெளியூர் போக யாராவது உடனே நல்ல நர்ஸாக் கிடைப்பாங்களான்னு விசாரிக்கிறியா?''

''எத்தனை நாளைக்கு மேடம்?''

''அதிகப்பட்சம் பதினைஞ்சு நாள்னு அந்தம்மா சொன்னாங்க...''

''விசாரிச்சு விவரம் சொல்றேன் மேடம்.''

''எனக்குச் சொல்ல வேணும் சாந்தி... எப்படியாவது ஒரு நர்ஸ் இன்னிக்கே புறப்பட்ற மாதிரி ஏற்பாடு செஞ்சிட்டு, திண்டிவனத்துக்கே போன் பண்ணிடேன். பாவம் அந்தம்மா இரண்டு நாளாப் பேச முயற்சி செய்திருங்களாம்... போன் கெட்டுப் போச்சாம். ஷி வாஸ் டெஸ்பரேட்....''

''எஸ் மேடம்... சொல்லிடறேன்.''



''டாக்டருக்கு இன்னிக்கு கன்ஸல்டேஷன் அப்பாயின்ட்மென்ட்ஸ் எப்படி? ரொம்ப ஹெவியா?''

''இல்லே மேடம். நாலு ஆபரேஷன் இருந்ததாலே கார்த்தால அத்தனை ஒத்துக்கலே. பதினொன்னரைலேருந்து ஒரு மணி வரைக்கும் ஆறு பேருக்குக் கொடுத்திருக்கேன்.''

''ஓ.கே. தென்... ஸீ யூ லேட்டர்...''

ரிஸீவரை வைத்து விட்டுப் பால்கனிக்குச் சென்ற கௌரி, ஈரத் துண்டை அவிழ்த்துத் தலை முடியை ஒரு பக்கத்துக்குக் கொணர்ந்து ஈரம் போகத் தட்டிக் கொண்டாள்.

எஸ், மேடம், சரி மேடம் என்று வார்த்தைக்கு வார்த்தை மேடம் போட்டு வாஸ்தவமான மரியாதை அடக்கத்துடன் பேசும் சாந்தி மேல் ஒரு நிமிஷம் கவனம் சென்றது.

நல்ல பெண்...

பழைய செகரட்டரி சுபா திருமணமாகிப் போன பிறகு, வேலைக்கு வந்தவள்.

சுபா மாதிரி அத்தனை கெட்டிக்காரத்தனம் இருக்குமோ, பார்த்தால் சாதுவாக இருக்கிறாளே தோற்றமும் அத்தனை எடுப்பாக இல்லையே என்று துவக்கத்தில் கௌரி லேசாகக் கவலைப்பட்டதுண்டுதான்.

ஆனால் நிஜத்தைச் சொல்ல வேண்டுமென்றால் வாய் திறக்காமல் வெகு திறமையான உதவியாளராக இருப்பதில் சுபாவைச் சாந்தி கண்டிப்பாய் மிஞ்சவே செய்தாள்.

கிட்டத்தட்ட ஒன்றரை வருஷங்களாகப் போகின்றன. இன்றுவரை ஒரு காரியத்தைச் செய்யவில்லை, இதை மறந்தாள், அதைத் தாமதித்துச் செய்தாள் என்று ஒரு தரம் கூட டாக்டர் அலுத்துக் கொள்ளும்படி அவள் நடந்து கொண்டதில்லை.

சாந்தியின் குடும்பத்தைப் பற்றி அதிகம் கௌரிக்குத் தெரியாது.

தெரிந்தவரையில், கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்த குடும்பம் என்பது புரிந்தது.

மூத்த பெண்.

இவள் உழைத்து, தம்பி, தங்கைகளை ஆளாக்கியிருக்

சிவசங்கரி

கிறாள் என்பதும், பொறுப்பு அதிகம் என்பதும் புரிந்தது.

அதற்கு மேல் சாந்தியும் சொல்லவில்லை. தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இருப்பதாகக் கௌரியும் எண்ணவில்லை.

பிரபலமான டாக்டரின் உதவியாளராக இருப்பவள் இன்னும் கொஞ்சம் கவர்ச்சியாக இருக்கலாமோ, என்று மட்டும் ஒரு தரம் கபா போன புதுசில் கௌரி யோசித்திருக்கிறாள். ஆனால், உடனேயே, இவள் மரியாதையாகப் பழகுகிறாள், டாக்டருக்குக் கச்சிதமாய் உதவி, திறமையான செகரட்டரியாக இருக்கிறாள். அப்புறம் கவர்ச்சி என்ன கவர்ச்சி? என்று அந்த நினைப்பை அத்துடன் ஒதுக்கி விட்டாள்.

பேசி ஐந்து நிமிஷங்களே ஆனதும், இதற்குள் அனௌன்ஸியேஷனுடன் தொடர்பு கொண்டு ஒரு நர்ஸ் ஏற்பாடு பண்ணிவிட்டு, இப்போது இன்டியனத்துக்குப் போன்செய்து திருமதி அன்னம்மாவிடம், 'மாலை பஸ்ஸில் நர்ஸ் வருகிறார், கவலைப்படாதீர்கள்' என்று சாந்தி சொல்லிக் கொண்டிருந்தாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை' என்று எண்ணிய கௌரி, சின்னப் புன்சிரிப்புடன் உள்ளே வந்தாள்.

ஹேர் ட்ரையரைப் பொருத்தி முடியைக் காய வைத்துக் கொண்டாள்.

தயாரான நாழிகையில் அன்றைக்குச் செய்ய வேண்டிய வேலைகள் என்னென்ன என்று ஒரு தரம் மனசில் நினைத்துப் பார்த்தாள்.

முதலில் பார்மஸிஸ்டிடம் பேச வேண்டும்.

மிஸஸ் சோமநாதன் எப்படி இருக்கிறார் என்று பார்க்க வேண்டும்.

கான்டீன் காப்பியின் தரம் குறைந்து விட்டதாக மேட்ரன் சொன்னதைக் கவனிக்க வேண்டும்.

ஜெனரேட்டரை ஓவர்-ஆயில் பண்ண மெக்கானிக் வந்தாரா என்று விசாரிக்க வேண்டும்.

அப்புறம்....

யோசனை மாறாமல், தயாராகி, அறைக் கதவைப் பூட்டிக் கொண்டு கீழே வந்தவள் ருக்மணியம்மாளிடம் சொல்லிவிட்டு வாசற் படிகளில் இறங்கினாள்.

இவள் நர்ஸிங் ஹோமில் நுழையும்வரை கூடவே வந்த விக்ரம் பத்தடி இருக்கையில் நின்று, அவள் கண்ணை விட்டு மறைந்ததும் திரும்பி வீட்டுக்கு வந்து வராந்தாவில் படுத்தது.

''குட்மார்னிங் மேடம்''—

''குட்மார்னிங்.''

''வணக்கம்மா....''

''வணக்கம்.''

''குட்மார்னிங் மிஸஸ் பாலாஜி''—

''ஓ! மிஸ்டர் சந்தானம்! குட்மார்னிங், என்ன இந்தப் பக்கம்?''

''ஹாஸ்பிட்டலுக்கு எதுக்கு வருவாங்க? ஒண்ணு தன் உடம்பைக் காட்டிக்க, இல்லே, இன்னொரு நோயாளியைப் பார்க்க... இது தானே?''

''நீங்க எந்தப் பிரிவு?''

''முதல்....''

கௌரி விளையாட்டாக இதுவரை பேசினதைத் துறந்து கரிசனத்துடன் வினவினாள்.

''உடம்புக்கு என்ன மிஸ்டர் சந்தானம்?''

''கொஞ்ச நாளாவே பசி இல்லே. சாப்பிட்டதும் ஜீர்ணமாக மாட்டேங்குது. ராத்திரி ஆனா ஒரு சங்கடம். விடாம ஏப்பம்... அப்பப்ப வாந்தி கூட வருது...''

''கவலைப்படாதீங்க... ஒண்ணும் இருக்காது. ஸ்டமக் அப்ஸெட்டாதான் இருக்கும்.''

''ஒரு மாசமாவா?''

அவள் பதில் சொல்லாது நின்றாள்.

''பத்திரிகைல என்னென்னமோ நோயைப் பத்தி, இன்ன அறிகுறின்னா இன்ன வியாதின்னு அர்த்தம்னு தெரியாதவங்களுக்கும் தெரியற மாதிரி விளக்கமா எழுதறேமா. நமக்குக் கொஞ்சம் உடம்பு முடியாமப் போனதும் அதெல்லாம்தான் நினைவுக்கு வருது...''

சின்னப் பையனின் தவிப்புடன் அவர் பேச, கௌரி குழந்தையின் கனத்தைக்



**வேலையும், கூலியும்!**

சமீபத்தில் தமிழ்நாட்டிலுள்ள ஒரு கோடை வாசஸ்தலத்திற்கு சென்றிருந்தேன். அங்கு குடும்ப சகிதமாக மூட்டை முடிச்சுகளுடன் இறங்கியதும் ஒரு ரிக்ஷாக்காரன் என்னிடம் வந்தான். 'ஒரு லாட்ஜுக்கு செல்ல வேண்டும் எவ்வளவு கேட்கிறாய்?' எனக்கேட்டேன். அதற்கு அந்த ரிக்ஷா காரன் 'இங்கிருந்து 'சரிவில் இறங்கி: மறுபடியும் மேலே ஏற வேண்டும்...' என நிறுத்தினான். 'சரி... உன் வாடகையைச் சொல்'' என்றேன் நான். அதற்கு அவன், ' ரிக்ஷாவில் நீங்களும் உட்கார்ந்து சாமான்களையும் வெச்சுக்கிட்டு இறங்கி ஏற பத்து ரூபாய்... அல்லது மேலே ஏறும்போது ரிக்ஷாவுடன் நடந்து வந்து, சாமான் கள் மட்டும் ரிக்ஷாவுடன் வர ஐந்து ரூபாய்... அல்லது மேலே ஏறும்போது சாமான்களுடன் ரிக்ஷா வரும்போது அதை பின்னாலிருந்து தள்ளி உதவினால் இரண்டு ரூபாய். எதற்கு சம்மதம்...?' என்றான்.

''பட்டாணி.''



குறைக்க முகத்தைக் குறும்பாக வைத்துக் கொண்டாள்.

''பெரிய எழுத்தாளர்... நீங்களே இவ்வளவு சைல்டிஷா பேசினா, எனக்குச் சிரிப்புத் தான் வருது.''

சந்தானம் தோளைக் குலுக்கினர். நெற்றியில் முளைத்த வியர்வையைத் துடைத்துக் கொண்டார்.

''சைல்டிஷாப் பேசலே, மிஸஸ் பாலாஜி... நிஜமாகவே கலக்கமாகத்தான் இருக்கு... நானெக்குப் போகலாம்னு டாக்டரைப் பார்க்க வர்றதை தள்ளிப் போட்டது இந்த அன்-ஈஸிப்பீலிங்காலதான்.. யாரைப் பார்த்தாலும் கான்சர்னு சொல்ற நாள் இது.''

''கமான் மிஸ்டர் சந்தானம்! நீங்க பெரிய எழுத்தாளரா இருக்கலாம். ஆனாலும் இப்ப இந்த வேண்டாத கற்பனை எதுக்கு? போய் வெயிட்டிங் ரூம்ல உக்காருங்க. டாக்டர் ரவுண்ட்ஸ்ல இருக்கார்.. வந்திருவார்.''

கதர் வேட்டியைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு யோசனையுடன் அவர் நடக்க, சின்னத் தலைவலி என்றாலும் உயில் எழுதி வைத்துவிடும் அவருடைய அதிதமான பயம் நினைவுக்கு வர, இந்த மனிதருடைய பயம் போக்க வேண்டுமே! என்கிற சன்னமான கவலையுடன் கௌரி நர்ஸிங் ஹோமின் வாசலில் இடப் பக்கமாக அமைந்திருந்த பார்மஸியை அடைந்தாள்.

இரண்டு கஸ்டமர்களைப் பார்த்துத்தெரிந்த மாதிரி புன்னகைத்துக் கொண்டே மருந்துக் கடைக்குள் சென்றாள்.

மேஜை, கண்ணாடிக் கதவுகளில் விரலைத் தேய்த்து தூசி இல்லாமல் இருக்கின்றனவா என்று பார்த்தவள், கேஷ் பெட்டியைத் திறந்து மருந்துகளை நோட்டம் விட்டாள்.

இதற்குள் கஸ்டமர்களை அனுப்பிவிட்ட பார்மஸிஸ்ட் சம்பந்தம் அருகில் வந்து நின்றார்.

''கு....குட்மார்னிங் மேடம்.''

''குட்மார்னிங். நேத்து நடந்த தப்பை டாக்டர் கிட்டச் சொன்னேன். நம்ப பார்மஸியா இப்படி; நம்ப சம்பந்தமா இத்தனை கவனக் குறைச்சலா நடந்துக்கிட்டார்னு ரொம்ப வருத்தப்பட்டார். நிறையக் கோபமும் கூட... இதுவே முதல் – கடைசி தவறு இருக்கட்டும்னு சொல்லச் சொன்னார்...''

சம்பந்தம் எச்சிலைக் கூட்டி விழுங்கிக்கொண்டார்.

சொந்தம் என்று சொல்லிக் கொள்ள யாரும் இல்லாமல், மஞ்ச காமாலை நோய் முற்றிப் போய் டாக்டர் பாலாஜியிடம் யாரோ செய்த சிபாரிசில் வர, அவரும் தர்மத்துக்குத்தானே பார்க்கிறோம் என்ற உணர்வு இல்லாமல், ஹாஸ்பிடலில் சேர்த்துக் கண்ணும் கருத்துமாய்க் கவனித்துப் புதுப் பிறவி எடுத்தவர் இந்த சம்பந்தம்.

இது நடந்து ஆண்டுகள் எட்டு இருக்கும்.

இவர் ஏழையாக இருந்தாலும் பார்மஸி படிப்பு படித்தவர். விபத்தில் மனைவி, குழந்தைகளை இழந்த துக்கத்தில் வாழ்க்கையில் படிப்பு விட்டுப் போனவர் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு, உடம்பு தேறி, டிஸ்சார்ஜ் ஆன இரண்டு மாசங்களில் நர்ஸிங்ஹோமின் தேவைக்காக ஒரு மருந்துக்



**தாற்காலிக தப்பித்தல்**

அம்மாவின்
கிழிசல் புடவைகள்
தங்கைகளுக்குத்
தாவணிகளாகும்.

அப்பாவின்
வேட்டிகள் எல்லாம்
இட்லித் துணியாகவும்
கைக்குட்டைகளாகவும்
க(ா)ட்சி மாறும்.

எனது
கிழிந்த பேண்ட்டுகளும்
சட்டைகளும்
பாத்திரக்காரனின் பேரத்துட
பக்கெட்டுகளாகும்.

நேற்றுப் பிறந்த
சகோதரனைப் பற்றி
இப்போதைக்குக் கவலையில்லை;

ஏனென்றால்—
இப்போது அவன்
நிர்வாணம்தானே!

—மேந்தா தாசன்



கடையைத் திறக்க உத்தேசித்தபோது சம்பந்தத்தை வரவழைத்து பொறுப்பை ஒப்படைத்து, அவர் ஒரு நிலைக்கு வர உதவியவர்கள் பாலாஜியும் கௌரியும்தான்.

''சத்தியமா இனியொரு தரம் இப்படி நடக்காதும்மா... டாக்டர் முகத்தைப் பார்க்கக்கூட எனக்குக் கஷ்டமா இருக்கு....''

கண்களில் சேர்ந்துவிட்ட நீரை மறைக்க, பார்வையைத் தழைத்துக் கொண்டு அவர் நிற்க, கௌரி சட்டென்று பேச்சை மாற்றினாள்.

''நேத்து மத்தியானம் என் கிட்ட சில மருந்துகள் ஸ்டாக் குறைஞ்சிடுச்சினு சொன்னீங்களே? என்னென்னு எழுதி வச்சிருக்கீங்களா?''

சம்பந்தம் சுறுசுறுப்புடன் நிமிர்ந்தார்.

''ரெடியா வெச்சிருக்கேன் மேடம்.''

''கொடுங்க....''

அவர் நீட்டிய காகிதத்தை வாங்கிக்கொண்டாள்.

**கா**ண்டீன் என்று இருந்த அந்த இரண்டு சின்ன அறைகளில், முதலாவதில் கௌரி நுழைந்ததுமே ஐயர் பரபரவென்று ஓடி வந்தார்.

அம்மா வந்திருக்கிறார் என்றால் விஷயம் இருக்க வேண்டுமே... என்ன?

அய்யர் கவலையுடன் பார்வையைச் சுழல விட்டார்.

டேபிள்கள் சுத்தமாக இருக்கின்றனவா?

பையன் அழுக்கு உடை அணியாமல் இருக்கிறானா?

ஈக்கள் மொய்க்காமல் பதார்த்தங்கள் மூடப்பட்டிருக்கின்றனவா?

''என்ன அய்யர்... பிஸினெஸ் எப்படி இருக்கு? ஆமா, இன்னிக்கு என்ன மெனு?''

''கார்த்தாலே இட்லி, உப்புமா போட்டேன். மத்தியானம் சாப்பாட்டுக்கு முருங்கக்காய் சாம்பார், கோஸ் கறி, காரட் ஸாலட், பருப்பு ரசம்.. மோர்... சாயங்காலம் ப்ரெட் டோஸ்ட்... இட்லி, பொங்கல் போடலாம்னு....''

அங்கு காண்டீன் நடத்த ஐயருக்கு வாடகை ஏதும் இல்லை. அய்யர் குடும்பம் பெரிசு. ஆறு பெண்கள், இரண்டு பிள்ளைகள் விதவையான தங்கை, வயசான அம்மா, மனைவி இத்தனை ஜீவன்களும் இவர் சம்பாத்தியத்தில் சாப்பிட்டு, உடுத்தி, படித்து வாழ்ந்தாக வேண்டும். காண்டீன் வைப்பது நோயாளிகளோடு தங்கும் நபர்களுக்கு வசதியாக இருக்கும் என்று தீர்மானித்த பிறகு கௌரியின் நினைவில் முதலில் எட்டிப் பார்த்தவர் இந்த ஐயர்தான்.

''நீங்கள் வாடகை எதுவும் தரவேணாம் அய்யர். இன் ஃபாக்ட், காண்டீன் துவங்க உங்களுக்கு முன் பணம் கொடுத்து உதவக் கூட நாங்க ரெடி... பதிலுக்கு நீங்க என்ன செய்யணும்னா, தரமான பதார்த்தங்களைத் தயாரிச்சுக் கொடுக்கணும். விலை யாருக்கும் கட்டுபடியாறாப்பல இருக்கணும். இதான் முக்கியம். என்ன சொல்றீங்க?''

சொல்ல என்ன இருக்கிறது?

காண்டீன் ஆரம்பித்து வருஷம் நாலாகிறது: அய்யர் இரண்டு பெண்களுக்குத் திருமணம் செய்து விட்டார். மூத்த பையன் கல்லூரியில் படிக்கிறான் என்றால் அத்தனையும் இவர்கள் உபயம்தானே?

கௌரி சுற்றி வளைக்காமல் விஷயத்துக்கு வந்தாள்.

''காண்டீன் காபி தரம் குறைஞ்சிடுத்துன்னு கம்ப்ளெய்ண்ட் வந்திருக்கு அய்யர்.''

''அ....அது வந்து... நல்ல பால் கிடைக்க மாட்டேங்கறது....''

''விலை ஏறியிருக்கா?''

''ஆ...ஆமா... லிட்டருக்கு எட்டணா ஏத்திட்டான்.''

''அதுக்காகப் பால்ல தண்ணி கலக்கலாமா அய்யர்? அஞ்சு காசு ஏத்திக் கொடுத்தாலும் காபி நல்லா இருக்க வேணுமா? இத்தனை வருஷமா சேர்த்துக்கிட்ட நல்ல பேரை நிமிஷத்துல கோட்டை விடலாமா? ம்?''

''....''

கௌரி எழுந்து நின்றாள்.

''பையன் நல்லாப் படிக்கிறானா? இரண்டாவது செமஸ்டருக்குப் பணம் கட்டணுமே... ஏன் என்னை வந்து பார்க்கலே?''

''நேத்துக்கூட வந்தான். நீங்க வெளில போயிட்டேள்.''

''இன்னிக்கு மூணு மணிக்கு மேலே வரச் சொல்லுங்க... அப்ப நான் வரட்டுமா?''

''சொல்றேன். ஆத்துலேந்து புதுசா காராப்பூந்தி செஞ்சுண்டு வந்திருக்கேன். சூடா உப்புமா இருக்கு, கொஞ்சம் தட்டுல வைக்கத் தரட்டுமா?''

கௌரி சிரித்தாள்.

''இப்ப ஒண்ணும் வேணாம். சாப்பாட்டு நேரத்துல வீட்டுக்குக் காரா பூந்தி மட்டும் அனுப்புங்க கொஞ்சமா; போதும்... தாங்க்ஸ்....''

பக்க வாசல் வழியாக உள்ளே வந்து கன்ஸல்டேஷன் பகுதியில் நுழைந்தாள்.

முதல் அறையில் அமர்ந்திருந்த சாந்தி புன்னகையுடன் எழுந்தாள்.

''டாக்டர் வந்தாச்சா?''

''மிஸ்டர் சந்தானம் உள்ளே இருக்கார் மேடம். திண்டிவனத்துக்கு நர்ஸ் இரண்டு மணி பஸ்லே புறப்படறாங்க... அவங்களுக்கும் இன்ஃபார்ம் பண்ணிட்டேன்.''

''வெரி குட்; அந்த போனை இப்படி வை சாந்தி. சில மருந்துகள் வேணும். கம்பெனிகளுக்குப் போன் பண்ணிடறேன்...''

எட்டி ரிஸீவரை எடுத்த கௌரி சட்டென்று மீண்டும் உட்கார்ந்தாள். அடிவயிற்றில் நறுக்கென்று வலி கிள்ளுவதைச் சாந்தி புரிந்துகொள்ளாமல் இருக்கவேண்டி அடி உதட்டைக் கடித்து, அந்த வேதனையை அமுக்கப் பார்த்தாள். முடியாது போக, ஒரு கையால் மேஜையின் விளிம்பை அழுந்தப் பற்றி மெதுவாக அதன் மீது கவிழ்ந்து கொண்டாள்.

(தொடரும்)

---

அவர்: உங்களுடைய புதுக் கட்சித் தொண்டர்கள் எல்லோரும் பலே பேர்வழிகள் என்று எப்படிச் சொல்றீங்க?''

இவர்: ரத்தக் கையெழுத்துப் போடச் சொன்னதுக்கு என் கையிலிருந்தே ரத்தம் எடுத்துக் கையெழுத்துப் போட்டுட்டுப் போயிட்டாங்க... அதான் இப்படி டயர்டா இருக்கேன்.

கோவை தங்கபாரதி



# வியர்க்குருவினின்று நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

## நைஸில் உபயோகியுங்கள்

### வியர்க்குருவினின்று விரைவில் நிவாரணம் பெறுங்கள்.






HTB-GLL/8808

நைஸில், மருந்துக்கலவையுள்ள பவுடர் ஆகும். வியர்க்குருவின் எந்தவிதத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே விசேஷமுறையில் தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவதனின்றும், பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது இது.

1. அளவுக்கு மீறிய வியர்வையைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது. 3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது. 4. சருமத்திற்கு இதமளிக்கிறது.

உடல் நலத்தின் உறைவிடம்

**க்ளாக்ஸோ**



# எனது வெண்ணிலா

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1983 ரூ.500 – இரண்டாவது பரிசுக் கதை.**

"பளார்!"

உடம்பை ஒருமுறை சிலிர்த்துக்கொண்டு, இப்பொழுதுதான் அடி விழுந்த மாதிரி கன்னத்தைத் தடவிக் கொண்டான்.

"இத்தனைக்கும் நான் முறை தவறி ரௌடி மாதிரியோ அல்லது வெறி பிடித்தவன் மாதிரியோ நடந்து கொள்ளவில்லை. கையை அன்போடு பிடித்தேன். அவ்வளவுதான் தியாகு!"....

• • •

"பளார்!"

ஆத்திரம் முழுதும் வலது கையில் ஏந்தி அவன் கன்னத்தில் இடியென இறக்கினாள்.

"ராஸ்கல்! என்ன தைரியம் இருந்தா கையைப் பிடிப்பே!"

கன்னத்தைத் தடவிக் கொண்டே கெஞ்சினான்.

"இதோ பார் சரளா! நான் தப்பான எண்ணத்தோடு கையைப் பிடிக்கவில்லை. சின்ன வயது முதற்கொண்டே ஒன்றாய்ப் பழகியிருக்கோம். உன்னிடம் எனக்கு எவ்வளவு பிரியம்னு நான் எவ்வளவோ தரம் சொல்லியிருக்கிறேன். பிரியம்னு சொல்றதைவிட 'அன்பு' 'காதல்'னு சொல்லலாம்."

"பெரிய தேவதாஸ்னு நினைப்போ!"

"சரளா! சத்தியமாய்ச் சொல்றேன். கல்யாணம் பண்ணிண்டா உன்னைத்தான் பண்ணிப்பேன்! இல்லேன்னு....!"

"உன்னை மாதிரி 'ரவுடி'யை நான் கல்யாணம் பண்ணிப்பேன்னு கனவு காணாதே. உங்கப்பாவுடைய நல்ல குணத்துக்காக, சத்தம் போடாம இருக்கேன். இனி ஏதாவது காதல் கீதல்னு பேசினே, காலிலே கிடக்கிறதைக் கையிலே எடுக்க வேண்டியிருக்கும். போடா நாயே!"

"சரளா! நான் உன்னைக் காதலிக்கிறேன் சரளா! உனக்காக நான் எதை வேண்டுமானாலும் இழக்கத் தயாராக இருக்கேன். தயவுசெய்து கவனமாக் கேள் சரளா. என் வாழ்வின் வசந்தமே நீதான்! என்னை நிராகரிக்காதே சரளா!"

"சேகர்! இன்னும் இரண்டு விநாடியிலே நீ வெளியே போகல்லே, கொலே விழும். ஜாக்கிரதை! என் கால் சுண்டு விரல் நகத்தைக் கூட என் புருஷனைத் தவிர யாரையும் தொட விட மாட்டேன். போ வெளியே!"

தலை குனிந்து கொண்டே சென்றேன்.

• • •

"பிறகு என்ன சேகர்!"

"தியாகு! இப்ப எனக்கு ஐம்பது வயசு. இன்னி வரைக்கும் கல்யாணம் பண்ணிக்கலே!. அவளுடைய நினைப்பை மாத்திக்கவே முடியலே!"

"அப்புறம் அவளைப் பார்க்கவே இல்லையா சேகர்!"

"அந்தச் சம்பவத்துக்குப் பிறகு நான் ரொம்ப மனசு உடைஞ்சு போயிட்டேன். ஒரு பெரிய பாங்கிலே வேலை கெடைச்சுச் சென்னைக்கே வந்தேன். அவ யாரையோ கல்யாணம் பண்ணிண்டதாகக் கேள்விப்பட்டேன். பத்து வருஷம் கழிச்சு நிலத் தகராறு விஷயமா ஊருக்குப் போனேன். அப்பப் பார்த்தேன் தியாகு! எப்படித் தெரியுமா?..."

"சொல்லு சேகர்!"

• • •

ராமேஸ்வரம் எக்ஸ்பிரஸ் கப்பலைப் பிடிக்க விரைந்து கொண்டிருந்தது. செங்கை, மானாமதுரை, பரமக்குடி எல்லாம் தாண்டி

**கல்யாண வெங்கடேசன்**

ராமநாதபுரம் வந்தது. குதிரை வண்டி, யானை சஞ்சாரம் வழியாக முக்கூறுணியைத் தாண்டி, தெற்குத் தெருவில் நுழைந்தேன்.

வக்கீல் எனக்காகவே கோர்ட்டுக்குப் போகாமல் காத்திருந்தார்.

''என்ன சேகர்! மெயில் லேட்டா?''

''ஆமாம் சார். வழக்கம் போல ஒரு மணி நேரம் லேட்.''

''சரி, உள்ளே போய்க் குளிச்சிட்டு,டிரஸ் பண்ணிண்டு வா. தாசில்தார் ஆபீசுக்குப் போய்ப்பத்திரங்களில் கையெழுத்துப் போடணும். நாளைக்கு ஊருக்குப் போகலாம் இல்லையா? அவசரம் இல்லையே!''

''இல்லே சார்! நாளைக்குப் போனால் போதும்!''

வக்கீலோடு தாசில்தார் ஆபீஸுக்குப் போனேன். வேலை யெல்லாம் முடிந்து வரும்போது சாயந்திரம் ஏழு மணி. கொஞ்சம் ஊரைச் சுற்றிப் பார்க்க வெளியே கிளம்பினேன். மண்ணில் புரண்டு விளையாடிய இடங்கள் எல்லாம், பசுமையான நினைவுகளாக மனத்தில் அலை மோதின. அவளுடைய நினைவுகள் வராமல் இருக்குமா? இப்பொழுது எப்படி இருப்பாள்! பார்க்க உள்ளுக்குள் ஒரு சிறு உறுத்தல். அவள் யாருடைய பெண்டாட்டியோ தெரியாது. பார்க்கணும் பார்க்கணும்னு மனசு அடித்துக் கொண்டது. அவள் வீட்டுப் பக்கம் எட்டி நடையைப் போட்டேன்.

• • •

வீடு அலங்காரச் செல்வச் செழிப்போடு விளங்கியது. பெரிய பணக்காரனுக்கு வாழ்க்கைப்பட்டிருப்பாள் போலும். முந்தி தான் குடியிருந்த வீட்டையே விலைக்கு வாங்கிச்



சில மாறுதல்கள் செய்து, மாளிகை மாதிரி செய்திருந்தாள்.

வெளியே இருந்த கூர்க்காவிடம் நான் வந்திருப்பதைச் சொல்லி அனுப்பினேன்.

சிறிது நேரத்தில் அவளே வெளியே வந்தாள். வயதின் கோடுகள் அடையாள மிட்டிருந்தாலும் இப்பவும் அழகாக இருந்தாள். கண்கள் வியப்பின் உணர்ச்சியை வெளிக் காட்டின.

''யார் சேகரா! வா, வா! என்ன அதிசயம்!''

உள்ளே போய் உட்கார்ந்தேன்.

''நில விஷயமா வக்கீல் வரச் சொல்லியிருந்தார். காலேலேதான் வந்தேன்! எப்படி இருக்கே சரளா?'' கன்னத்தைத் தடவிக் கொண்டே கேட்டேன்.

சிறிது நேரம் சூன்யத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு கைகளால் முகத்தை மூடிக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தாள்.

பதறிப் போய் விட்டேன்.

''சரளா! என்ன இது! சும்மா விளையாட்டாகக் கன்னத்தைத் தடவிக் கொண்டேன் சரளா! பழைய விஷயத்தை ஞாபகப் படுத்தல்லே சரளா! வேண்டாம்! அழாதே சரளா!''

அழுகையை நிறுத்திவிட்டு நிமிர்ந்தாள். அவள் கண்கள் கலங்கி யிருந்தன.

''சேகர்! நீ இன்னும் கல்யாணம் பண்ணிக்கலேன்னு கேள்விப் பட்டேன். காரணம் என்னன்னு எனக்குத் தெரியும். ஆனால் என் நிலைமை உனக்குத் தெரியுமா சேகர்?''

''கல்யாணம் பண்ணிண்டேன்னு கேள்விப் பட்டேன்.''

''ஒரு கல்யாணம் இல்லே சேகர், நிறையவே பண்ணிண்டாச்சு. அன்னிக்குக் கையைப் பிடிச்சேன்னு உன்னை அறைஞ்சேன். இப்ப எப்படித் தெரியுமா சேகர்! உடம்பிலே ஆண்கள் கை என்ன, உடம்பு படாத இடமே கிடையாது!''

''சரளா!''

''ஆமாம் சேகர்! நான் கல்யாணம் பண்ணிண்டவன் குழந்தையைக் கையிலே கொடுத்துட்டு ஓடிப்போயிட்டான். எனக்கும் என் குழந்தைக்கும் பிழைப்புக்கே வழியில்லே. உடம்பை வித்துத்தான் பிழைக்கிறேன், சேகர்!''

''சரளா! என் வாழ்விலே வசந்தமா இருக்க வேண்டியவ நீ! மனசிலே இன்னும் நீ அப்படியே இருக்கே சரளா! உனக்கா இந்த நிலைமை! ஐயோ சரளா! என்ன சொல்வேன்! இது என்ன கொடுமை, ஆண்டவனே!''

நான் கதறினேன்.

கண்ணீரைத் துடைத்தாள்.

''சேகர்! இது என்ன சின்னப் பையன் மாதிரி!''

''அழாதே! விதியின் விளையாட்டுக்கு நாம் என்ன செய்ய முடியும்?''

''சரளா! எனக்கொரு கடிதம் போட்டிருக்கக் கூடாதா! ஏன் இந்தத் தொழிலைச் செய்யறே சரளா! என்னுடைய அழகான ஓவியத்தை நீ ஏன் சரளா அசிங்கப்படுத்தினே! இது நியாயமா சரளா!''

என்னால் தாங்க முடியவில்லை. உடைந்து போய் விட்டேன். சிறிது நேரத்தில் ஒரு முடிவுக்கு வந்து விட்டேன்.

''சரளா! உனக்கு வேண்டாம் இந்தத் தொழில். இப்பவே என் கூடப் புறப்பட்டு வந்துவிடு. ஆயுள் முழுக்க உன்னையும் உன் பிள்ளையையும் நான் காப்பாத்தறேன். இது சத்தியம் சரளா!''

மெதுவாகச் சிரித்தாள்.

''என்ன சேகர்! இப்பவும் அந்த ஆசையா! என்னை அழைச்சிக்கிட்டுப் போய் அன்னிக்கு அனுபவிக்காததை இப்ப அனுபவிக்கலாமுன்னு ஆசையா? வேண்டாம் சேகர். அன்னிக்கு நீ பார்த்தது அழகான வாசனையுள்ள மலர்த் தோட்டம். இப்ப நீ பார்க்கிறது வெறும் காகிதப் பூ!''

''சரளா! நான் உன்னை அந்த ஆசையிலே வான்னு கூப்பிடலே. என் மனசிலே புத்தம் புது மலர் சரளா இன்னிக்கும் அப்படியே இருக்கா! அதை இந்தக் கோலத்தில் பார்க்க நினைக்க என்னாலே முடியல்லே. உடல் ஆசைக்காகக் கூப்பிடலே. அதை நான் எப்பவோ மறந்தாச்சு. என் ஓவியம் அப்படியே இருக்கணும், வா சரளா! சகோதரி ஸ்தானத்துல வச்சு உன்னைக் காப்பாத்தறேன்.''

''சேகர்! என்ன இது!''

''ஆமாம், சரளா! அழகான பெண்கள் மனைவியாத்தான் அமையணும்னு அவசியம் இல்லே. மகளா அடையலாம். சகோதரியா இருக்கலாம். என்னைப் பொருத்த மட்டில் எனக்கொரு காவியம் நீ சரளா! வாழ் நாள் முழுதும் என் சகோதரியாஇருக்கலாம்!வேண்டாம் சரளா இந்தச் சாக்கடை! என்னோடு வந்துவிடு.''

சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்தாள். அவளும் ஏதோ முடிவுக்கு வந்தவள் போல் பேசினாள்.

''சேகர்! நீ என் மேல் வைச்சிருக்கிற பவித்திரமான அன்புக்கு நான் என்ன கைம்மாறு செய்யறதுன்னு தெரியல்லே. எனக்குத் தெரிஞ்சது இதுதான். 'இனிமேல் இந்தத் தொழிலைச் செய்யல்லே. உன்னுடைய கை படாத ஓவியமாகவே இருக்கிறேன். இனிமேல்!''

''என் கூட வந்துவிடு சரளா!''

''வேண்டாம் சேகர்! வேண்டாம்! அது வீண் பேச்சுக்கு இடமாகும். நான் இங்கேயே என்பையனோடு இருக்கிறேன். நீ வேறே கல்யாணம் பண்ணிண்டு சௌக்கியமா இருந்தாயானா அதுதான் எனக்கு சந்தோஷம். உன்னால முடிஞ்சதுன்னா எனக்கு மாசா மாசம் பணம் அனுப்பு. என் பையனைப் படிக்க வைக்கிறேன். காலம் நல்லா அமைஞ்சதுன்னா, அவனை விட்டுப் பணத்தைத் திருப்பிக் கொடுத்திடறேன். அதுதான் சரியானது சேகர்.''

''சரளா! என் மேலே உனக்கு நம்பிக்கை இல்லையா?''

''அதில்லே சேகர்! நானாவது மலர்ந்து பல பேருக்கு மணமாக இருந்திருக்கேன். இனிமேல் கருக வேண்டியதுதான். உன் வாழ்க்கை அப்படி யில்லே சேகர். என்னை நினைச்சு மொட்டை மரமா ஆக்கிருக்கிறே உன் வாழ்க்கையை. நீ சந்தோஷமா அனுபவிக்கணும். கல்யாணம் செஞ்சுண்டு!''

''இல்லே சரளா! அது என்னாலே முடியாத காரியம் இனி மேலே! சரி! நீ என் கூட வர வேண்டாம். மாசா மாசம் பணம் அனுப்பறேன். பையனைப் படிக்க வை! தயவு செய்து இந்த வாழ்க்கையைத் தொடராதே சரளா!''

''சத்தியம் பண்றேன் சேகர்! இனிமேல் உன் ஓவியத்தைக் களங்கப்படுத்தறதுக்கு எனக்கு உரிமை கிடையாது. உன் கிட்ட ஒருவனிடம்தான் நான் பணம் வாங்குவேன். வாரா வாரம் பணம் வந்து சேர்ந்த



கேரள மின்சார மந்திரி திரு பால கிருஷ்ண பிள்ளை எல்லாத் தெய்வங்களுக்கும் நேர்த்திக்கடன் வேண்டிக் கொண்டார்.

மழை பெய்தால் மெழுகுவர்த்தி சர்ச்சில் ஏற்றி வைப்பதாக. அதே போல் கோட்டாணிக்கரை, பழவங்கடி, சபரி மலை மற்றும் கொட்டாரக்கரா பிள்ளையார்களும் மந்திரியின் பட்டியலில்இடம் பெற்றனர். மழை பெய்தது!

மந்திரியும் தமது நேர்த்திக்கடனைச் செலுத்தத் துவங்கியுள்ளார்.

முதலில் பாராமுலா சர்ச்சில் மெழுகு வர்த்தி ஏற்றினார்.

—லட்சுமி நடராஜன்



விவரம் கடிதம் எழுதுவேன். பையனுடைய பெயருக்குப் பணம் அனுப்பு சேகர்!''

''சரளா!''

• • •

''தியாகு! இப்ப என் உடல் இருக்கிற நிலைமையிலே இன்னும் எத்தனை நாளைக்குத் தாங்குவேன்னு சொல்ல முடியாது. நீ எனக்கொரு உபகாரம் பண்ணு தியாகு! ஒருவேளை நான் செத்துட்டேன்னு, எனக்குப் பதிலா என் பேர்லே அவனுக்குப் பணம் அனுப்பு. நான் செத்துப் போயிட்டேன்கிற தகவல் அவனுக்குத் தெரிய வேண்டாம். தெரிஞ்சா பணம் வாங்க மாட்டான்! செய்யறியா தியாகு!''

''கட்டாயம் செய்யறேன் சேகர்! நீ கவலையே படவேண்டாம்.''

தியாகு சேகரின் கைகளில் சத்தியம் செய்து கொடுத்தான்.

• • •

மாதங்கள் உருண்டோடின. சேகர் அவனுடைய வியாதிக்குப் பலியாகி இரண்டு மாதமாயிற்று. நண்பனுக்குக் கொடுத்த வாக்குப்படி அவன் பேரிலேயே அவனுக்காகப் பணம் அனுப்பினான் தியாகு. பணம் அனுப்பின மறு வாரம் கடிதம் அவனிடமிருந்து வரும்.

ஐந்தாறு மாதம் கழித்து வாசலில் யாரோ ''சேகர், சார்! சேகர் சார்!'' என்று கூப்பிடற மாதிரி சத்தம் கேட்டு வெளியே வந்தான் தியாகு.

ஒரு இருபது வயசுப் பையன் வெளியே நின்று இருந்தான்.

''சார்! சேகருடைய வீடு இதுதானே! சேகர் இல்லையா?''

தியாகு வேதனையோடு அவனைப் பார்த்தான். யார் இந்தப் பையன்? சேகருக்கு உறவு முறையில் யாருமே கிடையாதே! சேகர் இறந்தது இவனுக்குத் தெரியாதா?'

யோசனையோடு அவனை உள்ளே வர வழைத்து உட்கார வைத்தான்.

''தம்பி! நீ யாரப்பா? நான் சேகருடைய நண்பர்தான்! என்ன விஷயம்னாலும்—சொல்லப்பா!''

''சார்! மாசா மாசம் இராமநாதபுரத்திலே இருக்கிற ஒரு அம்மாவுக்குப் பணம் அனுப்புவாரில்லையா? அந்த அம்மாவோட மகன்தான் சார். நான் இப்ப படிச்சுட்டு வேலையிலே இருக்கேன் சார். அம்மாதான் சொல்லச் சொன்னாங்க. இனிமே பணம் வேண்டாம். வாங்கின பணத்திலே ஒரு பாதியையாவது திருப்பிக் கொடுத்துடுன்னு. அதுதான் கொண்டு வந்திருக்கேன் சார். எங்கே சார் சேகர்? வெளியே போயிருக்காரா? எங்கம்மா எல்லாம் விவரமாகச் சொல்லியிருக்காங்க. அவர் எங்களுடைய தெய்வம் சார்.''

தியாகு அரண்டு போனான். எப்படி ஆரம்பிப்பது? எப்படி முடிப்பது என்றே தெரியவில்லை. வேறு வழியில்லை. இனி



அட்டெண்டர்: முதலாளி கிட்டே பேசி ஆபீஸ் கட்டடம் மொத்தமும் உடனே ஏர்-கண்டிஷன் பண்ணிடச் சொல்லுங்க சார்!

மானேஜர்: அதுக்கென்னப்பா குடை?

அட்டெண்டர்: ஃபேன் காத்துலே எனக்கே தூக்கம் சரியா வரமாட்டேங்குதுன்னு உங்களைப் போல கூடுதல் சம்பளம் வாங்குறவங்க எவ்வளவு கஷ்டப்படுவீங்கன்னு எனக்குத் தெரியாதா ஸார்!

—ஏ. சுகுமார்



மேலும் மறைப்பது நியாயமாகத் தெரியவில்லை.

''தம்பி! சேகர் இறந்து போய் ஐந்து மாதமாச்சு! கவலைப்படாதே. அவர் ரொம்ப நாள் உடம்பு சரியில்லாம இருந்தாரப்பா!''

''சார்!'' பையன் திகைத்தான். கண்கள் நீரைக் கொட்ட அப்படியே சரிந்து உட்கார்ந்தான்.

''சார்! ஐந்தாறு மாசமா இருக்க முடியாது சார்! போன மாசம் கூடப் பணம் வந்தது சார்!''

''ஆமாம் தம்பி! பணம் அனுப்பினது உண்மைதான். ஆனால் அது சேகரில்லை. நான்தான். சாகிற தருவாயிலே அவன் என் கிட்டச் சொல்லிட்டுப் போனான். தான் செத்துட்டதாகத் தெரிஞ்சா உங்கம்மா எங்கே பணம் வாங்க மாட்டாளோன்னுதான் தகவல் தெரிவிக்கவில்லை. இப்பவும் கூட நீ உங்க அம்மா கிட்டே சொல்லிடாதே. பணம் வேணும்னு அனுப்பலை. அம்மா கிட்டே மாத்திரம் அவங்க உயிரோட இருக்கிறவரைக்கும் சேகர் செத்ததாகச் சொல்ல வேண்டாம். நான் கெஞ்சிக் கேட்டுக்கிறேன்!''

பையன் அழுத கண்களோடு நிமிர்ந்தான்.

''அதுக்குத் தேவையில்லை சார்!''

''ஏனப்பா!''

''எங்கம்மா செத்துப்போய் ஒரு வருஷம் ஆச்சு. சேகரய்யாவுக்குத் தெரிஞ்சா எங்கே மனம் உடைஞ்சு செத்துடுவாருன்னுதான் தெரிவிக்கலை. எங்கம்மா பேர்லே நான்தான் கடிதம் எழுதிக்கிட்டு இருந்தேன். எங்கம்மா சாகும்போது அப்படித்தான் செய்யணும்னு சொல்லிட்டுப் போனாங்க!''

தியாகு அயர்ந்து விட்டான்.

பையன் கலங்கிய கண்களோடு விடை பெற்றான்.

# ஆவின் ஊழியர் அவதி



ஸ்கிம் மில்க் பவுடர் என்ற பெயரில் தமிழ்நாடு பால்வள நிறுவனம் ஒரு பால் பவுடரைத் தயார் செய்கிறது. ஆவின் பாலகங்களில் அரை கிலோ பாக்கட் பதினைந்து ரூபாய். இதே பால் பவுடர் சில தனியார் கடைகளில் ரூ. 14.25 முதல் ரூ. 14.75 விலையில் கிடைக்கிறது. இதுகுறித்து ஆவின் பால் டிப்போ சேல்ஸ் மேன் ஒருவரை விசாரித்தேன்.

ஆவின் ஸ்கிம் மில்க் பவுடரை ரூ.13.90க்கு சில தனிப்பட்ட வியாபாரிகளுக்குத் தருகிறார்கள். அவர்கள் குறைவான லாபம் கிடைத்தால் போதுமென்ற நல்லெண்ணத்தில் விற்பனை செய்கிறார்கள். ஆனால் நாங்கள் 15 ரூபாய்க்குத்தான் விற்பனை செய்ய வேண்டும் – இதற்குக் குறைவாக விற்கக் கூடாது என்று உத்தரவு. இதனால் எங்களைப் போன்ற ஆவின் சேல்ஸ்மேன்களைப் பொது மக்கள் தவறான கண்ணோட்டத்தில் பார்க்கிறார்கள்.''

''அது சரி, ரூ. 1.65–க்கு விற்க வேண்டிய பால் பாக்கெட்டுகளை 5 பைசா அல்லது 10 பைசா கூட்டி அதிக விலைக்கு விற்கிறீர்களே, அது என்ன நியாயம்?'' என்று கேட்டேன். அவ்வளவுதான், தாம் படும் அவதிகளை அடுக்க ஆரம்பித்தார் அவர்.

''ஒருபால் டிப்போவில் லாரியில் வந்து இந்தப் பால்பாக்கட்டுகளை சப்ளைசெய்யும்போதே ஏதாவது ஒன்று அல்லது இரண்டு பாக்கெட்டுகளில் பால் கசிய ஆரம்பித்திருக்கும். இந்தப் பாக்கெட்டுகளை கார்டுக்குப் பால் வாங்கும் எந்த வாடிக்கையாளரும் வாங்க மாட்டார். காசுக்கு வாங்குபவர்களும் ஏற்க மாட்டார்கள். கடைசியில் நாங்கள் தான் கைப்பணத்தைப் போட்டு வீணாகிப் போன பால் பாக்கெட்டுக்கும் தொகை கட்ட வேண்டும்.

''கார்டுக்குப்பால் தவிர எக்ஸ்ட்ரா பால் என்ற பெயரில் பால் சப்ளை செய்கிறார்கள். இந்தப் பால் பாக்கெட்டுகள் ஒரு டிப்போவில் 20 வரை விற்கும் என்றால் அங்கு 50 பாக்கெட்டுகள் வரை வலுக்கட்டாயமாக இறக்கி விட்டுப் போய் விடுவார்கள். அந்தப் பாக்கெட்டுகள் விற்றாலும் விற்காவிட்டாலும் அடுத்த நாள் காலை மொத்த பாக்கெட்டுகளுக்கும் நாங்கள் பணம் கட்டி விட்டு வர வேண்டும். விற்பனையை அதிகரிக்கிறோம் என்ற பெயரில் எங்களை இப்படி இக்கட்டில் மாட்டி விடுகிறது நிர்வாகம். கேட்டால் 'டார்கெட் ரீச்' ஆக வேண்டுமாம்!''

''விற்காத பாக்கெட்டுகளை அடுத்த நாளாவது விற்கலாம் என்றால் (அடுத்தநாள் புதிய பாக்கெட்டுகள் வேறு வந்துவிடும்.) அதுவரை அதைக் குளிர் சாதனப்பெட்டியில் வைத்துக் கெடாமல் பாதுகாக்க வேண்டுமே? இதற்கு உதவத் தயாராக இருப்பவர்கள் பாக்கெட்டுக்கு 5 பைசா கமிஷன் கேட்கிறார்கள். இதனாலும் எங்களுக்குக் கைப் பணம் நஷ்டம்.

''அதிகாலை நான்கு அல்லது ஐந்து மணிக்கே பால் விற்பனை ஆரம்பித்து விடுகிறது. அந்தச் சமயங்களில் மின்சாரம் இல்லையென்றால் மண்ணெண்ணெய் விளக்கு அல்லது மெழுகுவர்த்தியைத் தான் நாங்கள் பயன்படுத்த வேண்டும். இந்தச் செலவுகளுக்கெல்லாம் நிர்வாகம் கையை விரித்து விடுகிறது. எங்களுக்குத் தரப்படும் சம்பளம் தினசரி 8 ரூபாய். லீவு கிடையாது – எவ்வளவு காலம் வேலை பார்த்தாலும் தற்காலிக ஊழியர் என்ற நிலையிலிருந்து நாங்கள் உயர்த்தப்படுவதில்லை. எங்களுக்குத் தரப்படும் 8 ரூபாயில் நாங்கள் இந்தச் செலவுகளைச் செய்து விட்டால் பிறகு கையில் என்ன மிச்சமிருக்கும்?''



## பரிசு ரூ 300 எந்த தலைப்பு யாருடையது?

இந்த இதழில் போட்டிக் கதை தவிர மூன்று சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன. ஒரு தலைப்பு கதாசிரியர் தந்தது. மற்றொரு தலைப்பு பத்திரிகை ஆசிரியர் கொடுத்தது.

கதாசிரியர் தந்த தலைப்பு எது?

கண்டுபிடித்துக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்பினால் பரிசு ரூ. 300. ஒருவருக்கு மேல் சரியான விடைகள் எழுதினால் பரிசு பகிர்ந்து தரப்படும். பத்துப் பேருக்கு மேல் சரியான விடைகளை எழுதிவிட்டால் குலுக்கல்தான்!

உறையின் மேல் எந்தத் தலைப்பு யாருடையது? என்று குறிப்பிடவும். முடிவு தேதி 29–8–83.

| கதாசிரியர் | கதாசிரியர் தந்த தலைப்பு |
|---|---|
| 1. ஜே.எஸ். ராகவன் | |
| 2. அன்னம் | |
| 3. ஜெயரதன் | |

என் பெயர்:

விலாசம்:

''அடிக்கடி செக்கிங் இன்ஸ்பெக்டர் சோதனை செய்ய வருவார். அப்போது விற்பனை செய்யப்பட்ட பாலுக்கும் பெட்டியில் இருக்கும் பணத்துக்கும் கணக்கு சரியாக இருக்க வேண்டும். எல்லோரையும் சரியாக ரூ. 1.65 கொண்டு வரவேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியாது. சில பழக்கமான வாடிக்கையாளர்கள் 5அல்லது 10 ரூபாய் நோட்டைக் கொடுத்து விட்டு, ''மீதி சில்லறை மாலையில் வரும்பொழுது வாங்கிக் கொள்கிறேன்'' என்று கூறிச்செல்வார்கள். ஆனால் இதை செக்கிங் இன்ஸ்பெக்டரிடம் சொல்வதற்கு முன்பே எங்கள் கையில் ''மெமோ'' தரப்படும்!

''சம்பளம் குறைவாக இருப்பதை எடுத்துச் சொன்னால், ''நீங்கள் செய்வது 'பார்ட்—டைம்' வேலைதானே!'' என்று கேட்கிறது நிர்வாகம். பால் சப்ளை செய்யும் வேன் அதிகாலை மூன்று மணிக்கு வரும் போது நாங்கள் டிப்போவில் இருக்க வேண்டும். எல்லா டிப்போக்களிலும் சப்ளை செய்துவிட்டு 'காலி 'டப்'களை, எடுத்துச் செல்ல அதே வண்டி ஆறரை அல்லது ஏழு மணிக்குத் திரும்பி வரும் பொழுது அவற்றை ஏற்றி அனுப்பிவிட்டுக் கணக்கைச் சரிபார்த்துக் கொண்டு நேராக வட்டார அலுவலகத்திற்கு வந்து பதினொரு மணிக்குள் முதல்நாள் விற்ற பால் பாக்கெட்டுகளுக்கான பணத்தைக் கட்டிவிட வேண்டும். மாலை பால் சப்ளை மதியம் ஒன்றரை மணிக்கே துவங்கி விடுகிறது. காலி 'டப்' எடுத்துச் செல்லும் வேன் நான்கு அல்லது நாலரை மணிக்குத் திரும்ப வரும். இவ்வளவு நேரம் கடமையாற்றுவது பார்ட் டைம் எனில் இதற்குமேல் நாங்கள் வேறு எந்த வேலைக்குச் செல்ல முடியும்?'' என்று கேட்டு வருத்தப்பட்டுக் கொண்டார் அந்த ஊழியர்.

ஆவினே நடத்தும் இந்த டிப்போக்களைத் தவிர கமிஷன் அடிப்படையில் வேறு பல டிப்போக்களும் இயங்கி வருகின்றன. இதில் பணியாற்றும் ஊழியர்களுக்குச் சம்பளம் கிடையாது. ஒரு அரை லிட்டர் பாக்கெட்டுக்கு 1 பைசா வீதம் கமிஷன் தரப்படுகிறது. இவர்களுக்குக் குறைந்த பட்சம் முந்நூறு ரூபாய் வரை கிடைக்கிறது. 'சம்பளம் இல்லாமல் நாங்களும் கமிஷன் அடிப்படையிலேயே வேலை செய்கிறோம்' என்று மற்ற ஊழியர்கள் கேட்டாலும் நிர்வாகம் மறுக்கிறதாம். ஒரே வேலையைச் செய்யும் இருவேறு பணியாளர்களுக்கு அரசு நிர்வாகத்திலேயே மாறுபட்ட ஊதியம் தரப்படுகிறது.

பேட்டி: ராஜா. செந்தில்நாதன்

படம்: 'சித்ரா'மணி.



ஒவ்வொரு நாளையும்

# டான்டெக்ஸ்®

அணிந்து துவக்குங்கள்

காலை முதல் இரவு வரை டான்டெக்ஸ் அணிந்து மகிழுங்கள். அதன் கச்சிதமான உடம்போடு ஒட்டும் அமைப்பும், சிறப்பும் உங்களுக்கு நாள் முழுவதும் இதமான சுகத்தை அளிக்கிறது.

IS : 4964



ஒட்டி உறவாட

டான்டெக்ஸ்

ப்ரீப்ஸ் • வெஸ்ட்ஸ் • காஷீவெல்ஸ்

ஸ்போர்ட்ஸ் பனியன்கள் • சிறுவர்களுக்கான ரகங்கள்




TTK தயாரிப்பு

Imageads-M- TT. 1568Tam

சென்னையின் சில பெரிய ஹோட்டல்களுக்குப் போய்

# ...01 அறைகளைத் தட்டியபோது...

### ரஞ்சித்—ரூம் நெ. 201

மிரண்ட கண்களுடன் கதவைத் திறந்தார்கள் மிஸஸ் ஸ்ரீயானியும், மிஸ் ஷிரார்த்தியும். இருவரும் ஸ்ரீலங்காவைச் சேர்ந்தவர்கள். கொழும்புவிலுள்ள தாஜ் ஹோட்டலில் வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு, சென்னைதாஜ் ஹோட்டலில் டிரெயினிங்குக்கு அனுப்பப்பட்டுள்ளனர். தாஜ் ஹோட்டல் டிரெயினிகளை, ரஞ்சித்தில் தங்க வைப்பானேன்? அதுதான் வழக்கமாம். ''போட்டோ எடுத்துக் கொள்கிறோம்'' என்றதும் வெட்கப்பட்டு, மறுத்து விட்டனர்.

### மெட்ராஸ் இன்டர்நேஷனல்—301ம் அறை

பி. எஸ். வி. ராமச்சந்திரா. 36 வயது. சிங்கப்பூரில் அரசாங்க அதிகாரி. இவரது அப்பா சீர்காழியிலிருந்து சிங்கப்பூர் போனவர். சிங்கப்பூரில் கிராமங்களுக்கு 'காம்பாங்' என்று பெயர். அங்கே மக்களுக்கு எல்லாவித வசதிகளும் இருக்கும். முதல் முறை இந்தியா வந்தபோது இங்கேயும் கிராமங்கள் அப்படித்தான் இருக்கும் என்று நினைத்தேன். தவறான முடிவு என்பது வந்ததும்தான் புரிந்தது என்றார். சிங்கப்பூரிலேயே ஒரு தமிழ்ப் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ளப் போகிறாராம். ''அட்வான்ஸ் திருமண வாழ்த்துக்கள்'' சொல்லிவிட்டுப் புறப்பட்டோம்.



எனக்கு அடுத்த மாதம் கல்யாணம்—
பி. எஸ். வி. ராமச்சந்திரா

### காஞ்சி—அறை எண் 401

உசேன், நாகர்கோயில்காரர். அந்தப் பகுதி அண்ணா தி. மு. க. செயலாளர். புரட்சித் தலைவரைச் சந்திக்கச் சென்னை வந்தாராம். 'சந்தித்துப் பேசினேன்' என்றார் மகிழ்ச்சி பொங்க. பள்ளிக்கூட நாட்களிலிருந்து எம். ஜி. ஆர். ரசிகன். ''எம். ஜி. ஆரை முதலில் பார்த்தது எங்கள் ஊருக்கு

புரட்சித்தலைவருக்குத் தங்கமான மனசு.
[illegible] உசேன்






☐ இருதயத்தில் உள்ள ரத்த நாளத்தில் ரத்தம் கட்டிப் போவதால் அடைப்பு ஏற்பட்டுப் பெரும்பாலான ஹார்ட் அட்டாக்குகள் உருவாகின்றன. ஒரு கிளைக் கால்வாயாக வேறு ரத்த நாளத்தைப் பொருத்துவதை பை-பாஸ் ஆபரேஷன் என்பர். (ஜெயில் சிங் செய்து கொண்டது) ஆனால் இதில் ஆபத்து அதிகம்.

இப்போது மிகச் சுலபமான வழி கண்டு

☐ புதிதாக ஒரு ஃபோன்: பட்டனைத் தட்டினால் மறுபுறத்தில் பேசுகிறவர் குரல் அறையில் உள்ள அனைவரும் கேட்க ஒலிபெருக்குகிறது. 112 டெலிஃபோன் நெம்பர்களை நினைவில் வைத்துக் கொள்ளும். தானே டயல் செய்து தரும். என்கேஜ்ட் ஆக இருந்தால் நிமிஷத்துக்கு ஒரு தடவை வீதம் அதே நம்பரைப் பத்துத் தடவை டயல்




# வளரும் விஞ்ஞானம்

யில் சிறிதாகக் கீறி ரத்த நாளத்தில் ஒரு குழாயை நுழைத்து அதனை இருதயம் வரை கொண்டு போய் ரத்தம் உறைந்திருக்கும் இடத்தை அடையச் செய்கிறார்கள். ஃப்ளூரோஸ்கோப் கருவி வழியாக உள்ளே நடப்பனவற்றைப் பார்த்தவாறே மருந்தை அதி மூலம் குழாய் வழியாகச் செலுத்துகிறார்கள். ஸ்ட்ரெப்டோகினேஸ் மருந்து ரத்தக் கட்டியைக் கரைத்து விடுகிறது. ரத்த ஓட்டம் தடைபடாமல் தொடர்கிறது!

☐ மேற்கு ஜெர்மனியில் ஓர் இயந்திரம் கடிதங்களின் மேலுள்ள விலாசங்களைத் தானே படித்துப் பல்வேறு ஊர்களுக்குப் போக வேண்டியனவற்றைத் தனித் தனியே பிரித்து விடுகிறது. ஒரு மணி நேரத்தில் 100,000 கடிதங்களை இது ஸார்ட்டிங் செய்துவிடுகிறது. ஆனால் ஒன்று. டைப்ரைட்டர் எழுதிய விலாசங்களை மட்டும்தான் படிக்கும். காரியாலய வட்டாரத் தபால் நிலையங்கள் இதனைப் பயன்படுத்துகின்றன. —நன்றி: ஸ்காலா

அவர் இன்பக் கனவு நாடகம் நடத்த வந்த போது. எம். ஜி. ஆர். திறந்த ஜீப்பில் போய்க் கொண்டிருந்தபோது கூட்டத்தை விரட்ட, ஒரு போலீஸ்காரர் தடியை ஓங்க, அது சின்னப் பையனான என் நெற்றியில் பட்டு ரத்தம் வந்தது. இதைக் கண்ட எம்.ஜி. ஆர். ஜீப்பை நிறுத்தச் சொல்லி, என்னைத் தூக்கி ஜீப்பில் உட்கார வைத்துக் கொண்டு நாடகத்துக்கு அழைத்துப் போனார். புரட்சித் தலைவருக்கு அவ்வளவு தங்கமான மனசு.''



''மனைவியுடன் ஒரு டிரிப் வருவேன்'' - ஷர்மா

இடையாது. அதனால்தான் 'அட்மிஷன் முடித்ததும் திருப்பதி போய்விட்டு வந்தாராம். ஆண்டவன் தரிசனம்செய்யபடிக்கட் போட்டுப் பணம் வசூலிப்பதைப் பற்றி ரொம்பக்குறைப் பட்டுக்கொண்டார். இலங்கையில் தமிழர் - சிங்களவர் பிரச்னை பற்றிக் கேட்டால்: ''ஐயம் ஸாரி ஏதும் சொல்ல முடியாது.''

பேட்டி: எஸ். சந்திரமௌலி
போட்டோ: ஈ. வெ. ரா. மோகன்

என் பெண் அட்மிஷன் விஷயமாய் வந்தேன்- திரு. பாஸ்கர சிங்கம்



## சவேரா—501

ஷர்மாவின் அப்பா 70 வருடங்களுக்கு முன் குவைத் போனார். ஷர்மா (சொந்த மாநிலம் உ. பி.) அங்கே ஏற்றுமதி இறக்குமதி பிஸினஸில் ஈடுபட்டுள்ளார். திருமணமாகி எட்டுக் குழந்தைகள். மனைவி ஈரானியப் பெண்மணி. ''இப்போ பிஸினஸ் விஷயமாய் வந்திருக்கிறேன். ஒரு தடவை மனைவி, குழந்தைகளுடன் இந்தியா முழுவதும் ஒரு சுற்றுச் சுற்ற வருவேன்'' என்றார்.

## மாரிஸ்—701

பாஸ்கர சிங்கம். ஸ்ரீலங்காவிலிருந்து வந்திருக்கிறார். தன் மகளைக் கல்லூரியில் சேர்க்க வந்தாராம். ஹாஸ்டலிலும் சேர்த்து விட்டார். 'ஸ்ரீலங்காவில் கல்லூரிகள் இல்லையா? எதற்கு இந்தியா வரவேண்டும்?' 'அங்கே கல்லூரிப் படிப்பைத் தமிழர்கள் தமிழிலும், சிங்களவர் சிங்களத்திலும் படிக்க வேண்டிய கட்டாயம். ஆங்கில மீடியம்

## காட்சி 1

[சூரட்டூர் சிற்றரசர் சூரகேசி ரகசிய ஒப்பனை அறையில் ஆண்டிப் பண்டாரமாக உரு மாறிக் கொண்டிருக்கிறார். இராப் பிச்சைக் கார வேடத்தில் சேனாதிபதி மாரப்பபூபதி 'அம்மா தாயே' என்று அடித் தொண்டையில் குரலெழுப்பி வசனப் பயிற்சி செய்து கொண்டிருக்கிறார்.]

சூரகேசி: மாரப்ப பூபதி! மாறு வேடத்தில் பண்டாரமாகத் தெருவோடு போகும் போது....

மாரப்ப: திருவோடு ஏந்திப் போக வேண்டும் என்கிறீர்களா மாமன்னா?

சூரகேசி (பற்களைக் கடித்து): மாரப்ப பூபதி! இடைவெட்டிப் பேசாதீர் என்று எத்தனை முறை இயம்புவது? பால் வியாபாரிகளின் முகத்திரைகளைக் கிழிக்க யாம் தொடங்கிய 'அன்னப் பறவை வளர்ப்பு வாரியம்' பற்றியும், ரகசிய அரசுக் கோப்புகளைப் பாதுகாக்க ஆரம்பித்த 'கோப்புகள் காப்பகம்' பற்றியும் மக்கள் பேசிக்கொள்வதை நாம் தெருவோடு போகும்போது செவி மடுக்க வேண்டும் என்று நான் சொல்வதற்குள்....

மாரப்ப: மன்னா! இந்த மண்டூகத்தை மன்னித்தருள வேண்டும். அன்னப் பறவைகளும், கோப்புக்களும் ஒருபுறம் இருக்க. நமது அமைச்சர் நலம் பெருவழுதியைப் பற்றி நான் கேள்விப்பட்டதை...

சூரகேசி (துந்தனாவை டொய்ங் டொய்ங் என்று மீட்டியபடி): ...பட்டதை....?

மாரப்ப: மன்னர் கேட்டவுடன் கொதித்தெழுந்து என்னை உடை வாளால் சரி பாதியாகப் பங்கிட்டு விடக் கூடாது. மன்னா! (குரலையும் உடலையும் தாழ்த்தி) அமைச்சர்நலம் பெருவழுதிக்கும் ஜியன்னு ஐயன்னு ஏயன்னுவுக்கும் தொடர்பு இருக்கிறதாம்....

சூரகேசி (இடிக் குரலில்): என்ன? என்ன? என்ன? என்ன சொன்னீர்? எங்கே மறுபடியும் சொல்லும் பார்க்கலாம்? அமைச்சருக்கும் எதற்கும் தொடர்பாம்...?

மாரப்ப (உடல் நடுங்க): ஜியன்னு, ஐயன்னு ஏயன்னு மன்னா!

சூரகேசி (கண்களில் கோபம் கொப்பளிக்க): மாரப்ப பூபதி! என்ன பிதற்றல் இது?

# ஹர்ஷவர்த்தனனின் ரகசியக்கோப்பு

அல்லது

# ஜீயன்னு ஐயன்னு ஏயன்னு



நீர் சொல்லும் இந்த வதந்தியைக் கிளப்பிவிட்ட அறிவிலி யார்?

மாரப்ப: 'கோப்புகள் காப்பகத்தின்' தலைவரும், மன்னர் பிரானின் மைத்துனருமாகிய ஹர்ஷ வர்த்தனன்தான் மாமன்னா!

(அதிர்ச்சியில் அரசரின் கையிலிருந்த துந்தனா நழுவிச் சேனாபதியின் கால் கட்டை விரல் மேல் விழ, 'அம்மா தாயே' என்று பழகிய வசனத்தை விட்டு 'ஐயோ அம்மா' என்று கத்துகிறார்.)

## காட்சி 2

['அன்னப் பறவை வளர்ப்பு வாரிய' அல்லித் தடாகத்தின் அருகில் மகர யாழை மீட்டிக் கொண்டிருந்த பேரழகி செல்வி சித்திரசேனா இடைரென்று மெல்லிய குரலில் பாடத் துவங்குகிறாள். அருகில் இருந்த அன்னப் பறவைகள் உடனே விலகிச் செல்கின்றன.]

ஹர்ஷவர்த்தனன் (வந்து கொண்டே): சித்திரசேனா! சித்திரசேனா! நீ எங்கே இருக்கிறாய்? சித்...

சித்திரசேனா: இதோ இங்கே இருக்கிறேனே தெரியவில்லையா? (குறும்புடன்) காதல் மயக்கம் கண்களை மறைக்கிறதோ?

ஹர்ஷ (வியந்து): அன்னங்களின் நடுவில் அமர்ந்திருந்த உன்னையும் ஓர் அழகிய அன்னம் என்று நினைத்துத் தடுமாறிவிட்டேன். பால் நிலாவில் பார்வையே மாறுகிறது இல்லையா?

சித்திர: மாறும்! மாறும்! (பொய்க் கோபத்துடன்) ஏன் இவ்வளவு கால தாமதம்? கோப்புக்களில் மூழ்கி விட்டீர்களோ? தேடி வரலாமோ என்றுகூடப் பார்த்தேன்.

ஹர்ஷ: ஏன்! தூதாக உன்னுடைய அன்னப் பறவைகளில் ஒன்றை அனுப்பியிருக்கலாமே!

சித்ர: ஐயோ! கூடாது. இவைகள் இப்போது அரசு ஊழியர்கள். நாம் பயன்



படுத்துவது தவறு. மேலும் இவ்வன்னங்களைச் சில கொடிய பால் வியாபாரிகள் பார்த்தால் கழுத்தை நெரித்துக் கொன்று விடுவார்கள்.

ஹர்ஷ: சித்திரசேனே! இப்போது என் கழுத்துக்கல்லவோ ஆபத்து வந்திருக்கிறது. மன்னர் சூரகேசி என்மேல் கடும் கோபம் கொண்டு என் கழுத்தின் மேல் ஒரு கண் வைத்திருக்கிறார்.

சித்திர (பதறி): ஏன்? எதற்காக? என்ன தவறு செய்தீர்கள்? முக்கிய கோப்பு எதையேனும் தொலைத்து விட்டீர்களா?

ஹர்ஷ: கோப்புகள் பத்திரமாகத்தான் உள்ளன. அவைகள்தான் இந்நாட்டில் நாளொரு கவடியும் பொழுதொரு குறிப்புமாகப் பெருகி வருகின்றனவே. என்னைக் கேட்டால், அடுத்த பட்டி மன்றத்துக்குப் பொருத்தமான தலைப்பு ''குரட்டூரில் விரைவாகப் பெருகுபவை கோப்புகளா அல்லது தோப்புகளா'' என்பதேயாகும். மன்னரின் கோபத்துக்குக் காரணம் நான் பழைய கோப்பில் கண்ட ஒரு குறிப்புத்தான்.

சித்திர: என்ன குறிப்பு?

ஹர்ஷ: (தயங்கி) அதிர்ச்சியாக இருக்கும் உனக்கு. உன்னுடைய தந்தை நலம் பெருவழுதி சியன்னு ஐயன்னு ஏயன்னுவில் ஒருவராம்.

சித்திர: அப்படி யென்றால்?

ஹர்ஷ (பெருமூச்சுடன்): ம்.... உனக்குத் தெரிந்திருக்க நியாயமில்லைதான். சியன்னு ஐயன்னு ஏயன்னு என்றால் 'சிறுப்பூர் ஐந்தாம் படை ஏற்பாடு' என்று பொருள்.

சித்திர: சிறுப்பூரா? நம்முடன் அடிக்கடி போர் தொடுக்கும் வல்லரசல்லவா அது!

ஹர்ஷ: ஆம்! சித்திரசேனே. அந்நாட்டிற்குப் போர் சமயத்தில் உதவும் நம் நாட்டுப் புல்லுருவிகளின்ரகசிய அமைப்புத்தான் அது. அத்துடன் இந்நாட்டு அமைச்சர் — அதுவும் நலம்பெருவழுதி — சம்பந்தப்பட்டுள்ளார் என்பது...



1980ம் வருடம் பிப்ரவரி மாதம் பிரான்சில் ஏற்பட்ட டிராபிக் ஜாம் தான் உலகிலேயே மிகப் பெரியது. பிரான்ஸில் இருக்கும் லியான்ஸ் என்னும் இடத்திலிருந்து பாரிஸ்வரை கிட்டத்தட்ட 109.3 மைல்களுக்குப் போக்குவரத்து ஸ்தம்பித்து விட்டது.

—ஏ. வி. தேவன்



சித்திர (பொங்கி எழுந்து): இருக்காது! ஒருபோதும் இருக்காது. இதை நான் நம்பவே மாட்டேன்!

ஹர்ஷ: (பெருமூச்சு விட்டு): மன்னர் சூரகேசியின் தந்தை வீரகேசியின் இலச்சனையுடன் இக்குறிப்பு உள்ளது. என் கண்களாலேயே பார்த்தேன்.

(சித்திரசேனையின் பால் போன்ற முகத்திலிருந்து திடீரென்று இரண்டு நதிகள் போல் பொங்கிவரும் கண்ணீரைப்பார்த்து அன்னங்கள் திகைத்து நிற்கின்றன.)

## காட்சி 3

[அலங்கரிக்கப்பட்ட அன்னப் படகில் ஹர்ஷவர்த்தனன் மீது சித்திரசேனை இறக்கத்துடன் சாய்ந்திருக்க, முறையே, படகு ஏரியிலும், அவ்விளம் தம்பதி இன்ப வெள்ளத்திலும் மெல்ல மிதந்து கொண்டு இருக்கின்றனர்.]

சித்திர: ஆனாலும் உங்களுக்கு அவசரம் அதிகம்.

ஹர்ஷ: அவசரமா? பின் நாம் சல்லாபித்து மகிழுவது எப்போது? இளமை முறுக்குப் போய், முதுமைத் தளர்ச்சி வரும்போதா?

சித்திர: சீ! நான் சொல்ல வந்தது வேறு. தாங்கள் அவ்வளவு அவசரப்பட்டு என் தந்தையை ராஜத் துரோகியாகச் சித்திரித்து விட்டீர்களே!

ஹர்ஷ: ஆம் அன்பே! நான் அவசரப்பட்டு விட்டேன். மாமன்னர் வீரகேசியின் காலத்தில் 'சிறுப்பூர் ஐந்தாம் படை ஏற்பாடென்ற' அமைப்பே இல்லை என்பதை மறந்தே விட்டேன். சியன்னு ஐயன்னு ஏயன்னு என்று மன்னர் அமைச்சர் பெயருக்குப் பின் குறித்துள்ளதின் பொருள் வேறு என்று பின்னர்தான் அறிந்தேன்.

சித்திர: இப்போது என் தந்தையின் மீது சந்தேகம் இல்லையே?

ஹர்ஷ: (அவசரமாக) இல்லை இல்லை! சிறிதளவு ஐயமும் ஏற்படவில்லை.

சித்திர: சியன்னு ஐயன்னு ஏயன்னு என்றால் நமது அரசு சங்கேத மொழியில் அந்தப் பெருந்தகையின் மீது 'சிறிதளவு ஐயமும் ஏற்படவில்லை' என்றல்லவா பொருள்!

ஹர்ஷ: இதைப் பற்றி மற்றொரு கோப்பிலிருந்து அறிந்த நான் மன்னரிடம் ஓடோடிச் சென்று, இயம்பியபோது அவர் உபயோகித்த கடும் சொற்கள் எம் இதயத்தில் ஏற்படுத்திய ஆழமான காயங்கள்...

சித்திர:... ''பிராயச் சித்தமாக அமைச்சரின் மகளின் கரம் பற்ற வேண்டும்'' என்ற அரச கட்டளையைக் கேட்டவுடன் மந்திரம் போட்டது போல் மறைந்து விட்டன அல்லவா?

(இருவரும் சிரிக்க, தவழ்ந்து வந்த வெண் பஞ்சு மேகம் ஒன்று ஆகாயத்தில் மிதக்கும் வெள்ளித் தாம்பாளத்தை இறுக அணைத்துக் கொள்கிறது!)

# ஹா...ச்சு ஹா...ச்சு
# நாளே பாழாப் போ...ச்சு

**ஜலதோஷம் உங்கள் நாளையே பாழாக்க விடாதீர்கள்.** மூக்கு ஒழுகல், அடைப்பு, தலை பளு. இவை ஜலதோஷத்திற்கே உரித்தான அறிகுறிகளாகும். இதனால் உங்களுக்கும் தொல்லை, உங்கள் நாளுக்கும் தொல்லை. சிந்தித்துச் செயல்பட வேண்டாமா? கோல்டரின் சாப்பிட்டுப் பாருங்களேன்! அது விசேட ஃபார்முலாவின்படி தயாரான ஜலதோஷ மாத்திரையாகும். வசதிக்கு வசதி, நிவாரணத்திற்கு நிவாரணம்!

**ஜலதோஷம் வாட்டுகிறதா?**
**கோல்டரின் அதை விரட்டுகிறது.**




CASBC 111-203 TAM

**ப**ள்ளிக்கூடத்திலிருந்து ரிடையர் ஆன பிறகுவரும் 'பென்ஷன்' போதவில்லை. காலத்தைக் கடத்த நான்கு இடங்களில் 'டியூஷன்' சொல்லித்தர வேண்டியிருந்தது. அவர்களை வீட்டுக்கு வரச் சொல்லவும் முடியவில்லை. இரண்டு அறைக் குடித்தனம். இடம் போதாது.

பஸ் கிடைக்காமல் ஒரு மணி நேரம் தவித்த பிறகு, பக்கமாகச் சாய்ந்தபடி வந்த பஸ்ஸில் தொத்திக் கொண்டு—பசித்த வயிறும் அசதியுடன் கூடிய உடலுமாக—நான் வீட்டு வாயிற்படி ஏறியபோது சம்பந்தி காத்துக் கொண்டிருந்தார்.

சம்பந்தி என்று கூறுவது சரியில்லை. தெய்வம் என்றுதான் குறிப்பிட வேண்டும். அப்படி ஒரு கருணை உள்ளமும், தெளிந்த சிந்தையும் இல்லாமல் இருந்தால் — இந்த ஏழை வாத்தியாரின் ஒரே மகளை — கால் காசு வரதட்சிணை மற்றும் ஒரு பொட்டுத் தங்கம் கூட இல்லாமல் தம் மருமகளாக்கிக் கொள்வாரா?

''வாருங்கள்!... வாருங்கள்!...'' என வரவேற்றபடி துண்டை எடுத்து முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டேன். துடைக்கத் துடைக்க வற்றாத கிணறு போல் வியர்வை ஊறியது.

''எதற்கு இந்த வயதில் இத்தனை சிரமம்? கடல் மாதிரி என் வீடு இருக்கிறது...வாருங்களென்றால் கேட்க மாட்டேன் என்கிறீர்கள்!'' என்று உரிமையுடன் கோபித்துக் கொண்டார் சம்பந்தி.

அவர் முன்னமேயே உணவருந்தி விட்டபடியால், எனக்கு மட்டும் பரிமாறினாள் என் மனைவி. பக்கத்தில் அமர்ந்து சுவரில் சாய்ந்தபடியே சம்பந்தி பேசினார்.

''உங்களுக்கு ரங்கபாஷ்யத்தைத் தெரியும் என்றார்கள்....''

நான் தலையை நிமிர்த்தினேன். ''எந்த ரங்கபாஷ்யம்?... சர்க்காரில் காரியதரிசியாக இருக்கிறாரே அவரா?'' என்றேன்.

''ஆமாம்... அவர்தான்... உங்கள் மாணவர் என்று சொன்னார்கள்.''



நான் பெருமையுடன்கூறினேன். ''ஆமாம் என்னிடம் படித்தவன்தான். இந்த ஊர் தான். நல்ல பையன். மரியாதை தெரிந்தவன்.''

''அவனிடம் நமக்கு ஒரு காரியம் ஆக வேண்டும். நம்ம சந்துருவுக்கு இப்போ 'பிரமோஷன்' வரணும்!... ரங்கபாஷ்யம் தான் கமிட்டி சேர்மன். அவர் நினைத்தால் போதும் நடந்துவிடும்.... ஆனால்....''

''சந்துரு என் மாப்பிள்ளையின் தம்பி. அவனுக்குச் செய்வது என் மாப்பிள்ளைக்குச் செய்வது போல். அப்படி என்ன சிக்கல்?''

''ரங்கபாஷ்யத்துக்கு இப்போ வேறே பெயர். தனக்கே ஒரு காரியம் ஆகவேண்டுமானால் கூட ஒரு பையிலிருந்து இன்னொரு பைக்குள் பணம் பெயரணுமாம்...''

''இல்லையே... அப்படி இருக்காதே...'' என்று மறுத்தேன்.

''நீங்கள் இன்னும் பழமையை நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். பணம் இல்லாமல் எதுவும் நடக்காது. நான் கொடுக்கத் தயார்.. அதிலும் போட்டி இருப்பதாகத் தெரிகிறது. அதனால்தான் உங்களைப் பார்க்க வந்தேன்.''

எனக்கு இப்போது தயக்கமாக இருந்தது. ரங்கபாஷ்யம் உண்மையில் அப்படிப்பட்டவனாக இருந்தால் என் பேச்சு — இந்த ஏழை வாத்தியாரின் பொருக — எடுபடுமா?

''நாம் சும்மா கேட்க வேண்டாம். நாமும் பணம் தரலாம். கையில் பத்தாயிரம் ரூபாய் கொண்டு வந்திருக்கிறேன். நீங்கள் தட்ட மாட்டீர்கள் என்று ரயிலில் 'ரிசர்வ்' செய்திருக்கிறேன். இன்றே புறப்பட்டுப்போய்...''

இனிமேல் என்ன?...பின்வாங்க முடியாது. போய் மோதிப் பார்க்க வேண்டியதுதான்.

எந்த முகத்தை வைத்துக் கொண்டு நான் ரங்கபாஷ்யத்தைப் பார்ப்பேன்? ஒவ்வொரு வகுப்பிலும் நேர்மையையும் ஒழுக்கத்தையும் வற்புறுத்திய நான் 'கையூட்டு' கொண்டு போவதா? நான் அவனிடம் போய்ப் பணத்தைக் காட்டிப் பல்லை இளிப்பதா? இதே ரங்கபாஷ்யம் ஒன்பதாம் வகுப்பில் — கணக்கில் — 'பெயில்'. அவன் அப்பா என்னிடம் 'பாஸ்' போடும்படி கெஞ்சினார். கூலி நான்கு மூட்டை கிச்சலிச் சம்பா பச்சரிசி. அரிசி வந்த பிறகுதான் அவர் வந்தார். ஆனால் அவர் ஏமாற்றத்துடன் திரும்புவதற்கு முன், அரிசியை வண்டியில் ஏற்றியவன் நான்.

என் மகள் மலர்ந்த முகத்துடன் அவர்கள் வீட்டு மகாலட்சுமியாக வளைய வருகிறாள். மாமியார், மாமனார் சொந்த மகளைப் போல் பார்த்துக் கொள்கிறார்கள். இந்த நிலையில் நான் மறுத்தால், அவள்?....

களைத்த முகத்துடன் — இரவு முழுவதும் அந்த முதல் வகுப்பு மெத்தை முள்ளாகக் குத்த — சென்னை வந்து அடைந்தேன்.

ரயில்வே நிலையத்திலிருந்தே ரங்கபாஷ்யத்தை வீட்டில் கூப்பிட்டேன். அப்போது வரலாமா என்று கேட்டேன்.

அடுத்த பதினைந்தாவது நிமிஷம் ரயில் நிலையத்திற்கு அவன் கார் வந்து அவன் வீட்டிற்கு என்னை அழைத்துச் சென்றது.

எனக்காகத் தனி அறையைச் சீர் செய்து கொடுத்தார்கள். தான் அவசரமாக வெளியில் போவதாகவும் இரவு வந்து பேசுவதாக'வும் கூறி ரங்கபாஷ்யம் விடைபெற்றுக் கொண்டு போனான்.

இரவு எட்டு மணி. கீழே கார் வந்து நிற்கும் ஒலி. ரங்கபாஷ்யம் வந்துவிட்டான். பேட்டிக்குச் செல்லும் மாணவன் போல் நான் தவித்தேன்.

அடுத்த பத்தாவது நிமிஷம் கீழே ஒரு குழந்தை அழுதது. ''இல்லேப்பா... இல்லேப்பா... நான் செய்ய மாட்டேன் அப்பா. இனிமே எடுக்க மாட்டேன் அப்பா '' என்று அந்தக் குழந்தை துடிக்க, யாரோ தொடர்ந்து அடிக்கும் ஒலி கேட்டது.

நான் மெதுவாகக் கீழே போய்ப் பார்த்தேன்.

''வாருங்கள் ஸார் ... இந்தத் தடிக் கழுதை பள்ளிக்கூடத்திலிருந்து எந்தக் குழந்தையோட பேனாவையோ எடுத்து வந்திருக்கிறது.... பிறத்தியார் பொருளுக்கு ஆசைப்படலாமா நமக்கு அது ஒட்டுமா?'' என மறுபடியும் அடிக்கப் போனான்.

''சின்னப் பெண்... சும்மா அடிக்காதே... இனிச் செய்ய மாட்டாள் '' எனத் தடுத்துச் சமாதானப் படுத்தினேன்.

எனக்குப் புரிந்தது. ரங்கபாஷ்யம் அப்படிப்பட்டவன் இல்லை. பணத்திற்காக ஏதும் செய்ய மாட்டான். பணத்தைப் பற்றிப் பேசுவது எங்கள் உறவைக் கொச்சைப் படுத்துவது போல் ஆகும். என் மேல் நானே சேற்றைப் பூசிக் கொள்ள மாட்டேன். ரங்கபாஷ்யத்தின் வீட்டில் நான் இரண்டு நாள் தங்கினேன். பேச்சு வாக்கில் சந்துருவைப் பற்றிச் சொன்னேன்.

''என் சம்பந்தியின் பேச்சைத் தட்டக் கூடாது என்றுதான் வந்தேன். அவனுக்குத் தகுதி இருந்தால் கொடு... எனக்காக என்று'' என்று நாணயஸ்தன் போல் சொன்னேன்.

''அப்படி ஒரு உதவி என்னால் செய்ய முடியுமானால் நான் கொடுத்து வைத்தவன் ஸார்... ஞாபகம் வைத்துக் கொள்கிறேன்!'' என்றான்.

அங்கிருந்தே சம்பந்திக்குக் கடிதம் எழுதிப் போட்டேன். பணத்தையும் 'டிராஃப்ட்' மூலம் திருப்பி அனுப்பினேன்.

சந்துருவுக்குப் 'பிரமோஷன்' கிடைத்து விட்டது.

ரங்கபாஷ்யம் சொன்ன சொல்லைக் காப்பாற்றி விட்டான் என நான் மகிழ்ச்சியுடன் இருந்தபோது, சம்பந்தி கடிதம் போட்டார்.

பிரமோஷனுக்குப் பன்னிரண்டாயிரம் செலவழிந்ததாம். அதற்காகத் தனியாக 'ஏஜெண்ட்' இருக்கிறார்களாம். அவர்களே நேரில் வந்து பேரம் பேசிக் காரியத்தை முடித்துத் தருகிறார்களாம். எனக்கு இது பேரதிர்ச்சி... ரங்கபாஷ்யமா இப்படி?

கொஞ்சம் கொஞ்சமாகப் புரிந்ததுஎனக்கு. அன்று அவன் வீட்டில் அவனுடன் நான் பேசியபோது அவன் ரொம்பவும் சாமர்த்தியமாக நடந்து கொண்டிருக்கிறான். நேர்மையானவன் போல் நடித்துப் பின்னாலேயே ஆள் அனுப்பி...

நான் படிக்க வேண்டிய பாடம் இன்னும் எத்தனையோ இருக்கிறது.

# நெருப்புப் போர்வை அல்லது எரிச்சல்



ஜெயரதன்

பல் தேய்த்தானதும் வேஷ்டி நுனியால் முகத்தைத் துடைத்துக்கொண்டே ஹாலுக்கு வந்தான் சபேசன்.

டீபாயில் காப்பி அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தது.

ஆர்வத்துடன் அவசரமாய் எடுத்து ஒரு வாய் சாப்பிட்டான். கசந்து வழிந்தது.

சர்க்கரை கரையவில்லையோ என்று ஆற்றிப் பார்த்தான்.

ஊஹூம். சர்க்கரை போட மறந்திருக்கிறாள்.

''ஏய் மங்களம்.''

காலை நேரத்துக் கரகரப்பு, குரலின் உஷ்ணத்தில் மேலும் தூக்கலாய்த் தெரிந்தது.

பதறிக் கொண்டு வந்தாள் மங்களம்.

''இதென்ன காப்பியா கஷாயமா? சர்க்கரையும் போடல்லே ஒரு மண்ணும் போடல்லே...'' என்றவன் டபரா டம்ளரை விசிறியடித்தான். ''காப்பியை ஒழுங்கா தரணுமேங்கற அக்கறையே இல்லே...

கடனேன்னு எதையாவது வச்சுட்டு 'குடிச்சுத் தொலை'ங்கற மாதிரி அடுப்பங்கரையிலே கிழிக்க வேண்டியது. வாய்க்கு ருசியா ஒரு வாய்க் காப்பி போடத் துப்பில்லே... தூ...;''

அடித்தொண்டை கிழியக் கத்தினான்.

'குபுக்'கென்று பொங்கிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு உள்ளே போனாள் மங்களம்.

இன்னொரு தம்ளரில் காப்பியைக் கொண்டு வந்து வைத்தாள்.

குடித்தான். சரியாகத்தான் இருந்தது.

மடக் மடக்கென்று காப்பியைக் குடித்து விட்டு 'ணங்'கென்று டம்ளரைக் கீழே வைத்தான்.

பேப்பர் எங்கே?

மேஜைமேல், பால்கனியில், பிரம்பு நாற்காலியில் என்று பார்வையைச் சுழல விட்டான்.

''ஏய், பேப்பர் எங்கேடீ?...''

''பக்கத்து வீட்டுக்காரர் வந்து அஞ்சு நிமிஷத்துலே தரேன்னு வாங்கிண்டு போனார். நீங்கதான் தூங்கறீங்களேன்னு..''

மென்று விழுங்கினாள் மங்களம்.

விர்ரென்று கோபம் தலைக்கேற மங்களத்தை இடது கையால் ஒரு அறை அறைந்தான்.

''என்னைக் கேக்காமெ ஏண்டி நீ குடுத்தே?... காசு குடுத்து வாங்கறது நான்... ஊருக்கு முந்தி படிக்கறவன்



## வைரமும் பேப்பர் வெயிட்டும்!

1901-ம் வருடம் ஹைதராபாத்தின் 6வது நிஜாம் மகபூப் அலி பாச்சா கல்கத்தாவுக்குச் சென்றார். அங்கு பிரபல வைர வியாபாரி ஜேக்கப் என்பவரிடம் ஒரு வைரத்தை வாங்கினார். 184.75 காரட் எடை கொண்ட ஜேக்கப்பின் வைரத்துக்கு நிஜாம் கொடுத்த விலை அந்தக் காலத்திலேயே அறுபது லட்சம் ரூபாய்! ஜேக்கப் வைரம்தான் அப்போது உலகத்திலேயே மூன்றாவது பெரிய வைரமாக இருந்தது. இன்று அதன் மொத்த மதிப்பு ரூபாய் 5 கோடி! அந்த வைரத்தைப் 'பேப்பர் வெயிட்'டாக நிஜாம் பயன்படுத்தினார்!

எம். இராஜேந்திரன்,
நன்றி: மாலை முரசு



பக்கத்து வீட்டுக்காரனா?... ஓசிப்பய... போய்ப் பேப்பரை வாங்கிண்டுவாடி, போடீ ... அவன் கேட்டானும் இவ குடுத்தாளாம்... இன்னொரு தடவை யாருக்காவது நீ குடு... ஒன்னை ரெண்டாக் கிழிச்சுப்பிடறேன்...''

புலி மாதிரி உலவினான் சபேசன்.

பதற்றத்துடன் பேப்பரை வாங்கிக் கொண்டு வந்தாள் மங்களம்.

மடிப்புக் கலைந்து, மெருகு குலைந்து, பக்கங்கள் மாறி மூலையில் கிழிந்து திரும்பி வந்த பேப்பரை ஒருவிதக் கொதிப்புடன் பார்த்தான்.

புரட்டிப் பார்த்துவிட்டு நான்காய் மடித்து மூலையில் வீசியெறிந்தான்.

சற்றுநேரம் அப்படியே உட்கார்ந்திருந்தான்.

காலடி ஓசை கேட்டதும் திரும்பிப் பார்த்தான்.

அவன் பிள்ளை சதீஷ் — அப்போதுதான் முகத்தைத் துடைத்துக்கொண்டு கையில் புத்தகத்துடன் படிக்க வந்து கொண்டிருந்தான்.

ஒவ்வொரு குழந்தைகள் பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பிக் கொண்டிருக்கின்றன. இப்போது தான் இவன் எழுந்திருக்கிறான். தூக்கம் வழிகிற கண்களுடன் இவன்படித்து விட்டு இனிமேல் கிளம்புவான். என்னத்தைப் படித்து, என்னத்தை உருப்படப் போகிறான்?

அடிவயிற்றிலிருந்து கோபம் கொப்பளித்துக் கொண்டு வர அவனையே உற்றுப் பார்த்தான்.

''என்னடா படிக்கப் போறே?''

குரலின் கடுமையைக் கண்டு ஒருநிமிஷம் உறைந்துபோய் நின்றான் பிள்ளை.

''சொல்லேண்டா, வாயிலே என்ன கொழுக்கட்டையோ?...''

''ஹி... ஸ்... ட... ரி...''

''ஹிஸ்டரி, மிஸ்டரின்னு எதையாவது புரட்ட வேண்டியது. பொழுதைப் போக்கிட்டுப் பள்ளிக்கூடத்துக்குப் போறேன்னு போயிட வேண்டியது... தமிழைப்படிடான்னு சொன்னேனில்லையா?... படிச்சியாடா?... 'போருக்குத் தயார்'னு எழுதச் சொன்னா, 'பேருக்குத் தாயார்'ன்னு எழுதறே, 'ரெண்டு சுழிக்கும் மூணு சுழிக்கும் தகராறு... ஸ்கூல்லே போய் என்ன பண்றே?... மோட்டுவளையைப் பார்த்துண்டு ஒக்காந்திண்டிருக்கியோ?...''

இடதுகையால் அவனை வாளிப்பிடித்து முதுகில் நான்கு அறை அறைந்தான் சபேசன். ''அழுகைச் சத்தம் கேட்டுதோ கொன்னுடுவேன்...''

உதடுகளைத் தவிர, மிச்சம் உடலெல்லாம் விம்ம, அம்மாவிடம் ஓடினான் குழந்தை.

மணியைப் பார்த்தான் சபேசன்.

நேரமாகி விட்டது. இனிமேல் குளித்துச் சாப்பிட்டு பஸ்ஸுக்கு ஓடத்தான் சரியாய் இருக்கும். ஒன்பது ஐந்து எக்ஸ்பிரஸ்ஸைப் பிடிக்க வேண்டும். இல்லாவிட்டால் ஆபீஸுக்கு லேட்டாகிவிடும்.

அவசர அவசரமாய்க் குளித்துச் சாப்பிட உட்கார்ந்தான்.

மங்களம் பரபரப்பாய்ப் பரிமாறினாள்.

''எல்லாம் கொதிக்கிறது... 'ஏதுடா அவசரமாகப் போகணுமே கொஞ்சம் ஆற வைப்போம்'ன்னு இடையாது. அடுப்பு லேர்ந்து பொங்கப் பொங்க எடுத்துத் தட்டுலே கவுக்க வேண்டியது... சே...''

சாப்பாட்டை விட உஷ்ணமாய் மங்களத்தைப் பார்த்து உறுமிவிட்டுச் சாப்பிட்டு எழுந்தான்.

வேகவேகமாய்ச் சட்டை பாண்டுக்குள் நுழைந்து மணியைப் பார்த்தான். ஒன்பது. இன்னும் ஐந்து நிமிஷம். மணியடித்தது மாதிரி பஸ் வந்துவிடும்.

கையில் டிபன் பையை எடுத்துக்கொண்டு வாசலுக்கு விரைந்தான் சபேசன்.

செருப்பில் கால்விட்டும் போதுதான் நினைவுக்கு வந்தது.

நேற்று மாலையே அறுந்து போய்விட்டிருந்தது.

''ஒன்பது ஐந்து க்னோஸ்'' என்று முணுமுணுத்துக் கொண்டு தேய்த்துத் தேய்த்து, செருப்பு ரிப்பேர் செய்கிற யாராவது கண்ணில் படமாட்டார்களா என்று கண்களால் துழாவிக்கொண்டே போனான்.

செருப்பை ரிப்பேர் செய்து, அவசரத்தில் அவன் கேட்ட பணத்தைப் பேரம் செய்யாமல் கொடுத்துவிட்டு, கூட்டத்தில் நிறைய பஸ்ஸில் நசுங்கிப் பிதுங்கி அலுவலகம் போய்ச் சேர்ந்தபோது அட்டெண்டன்ஸில் சிவப்புக் கோடு போட்டாகி விட்டது.

பெருமூச்சு விட்டுக் கொண்டு தன் இடத்தில் அமர்ந்தான் சபேசன்.

''என்னடா சபை, இன்னைக்குலேட்டா? அக்கவுண்டண்ட் மொறைச்சாரு?...''என்று சேட்டான் ஸ்டீபன். பக்கத்து ஸீட் குமாஸ்தா.

'ஆமா லேட்டு... இன்னிக்கும் லேட். நாளைக்கும் லேட்... தெனம் லேட்... அப்படித்தான் லேட்டாய் வருவேன். என் இஷ்டம். நீ யார்ரா கேக்கறதுக்கு?...'

மனத்துள்பொங்கியஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, பதில் பேசாமல் உட்கார்ந்திருந்தான்.

மேஜையில் மலையாய் ஃபைல்கள் குவிந்திருந்தன.

நிறையக் கடிதங்கள். பதில் எழுதியாக வேண்டும். அவனுக்கென்று ஹெவி சீட்டாக மாட்டிக் கொண்டது. அவனவன் உல்லாசமாய் இருக்கிற போது, தான் மட்டும் குனிந்த தலை நிமிராமல் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. தலையெழுத்து.

தலையில் பெரிய குல்லாயுடன் ஒருவர் வந்து அன்று மாலையே அவசரமாய் அவர் கடிதத்துக்குப் பதில் வேண்டுமென்று ஞாபகப் படுத்தினார்.

''நாலு நாள் கழிச்சுத்தான் பதில் கெடைக்கும். ஒடனே வேணும்னு எப்பிடி?''

''லெட்டர் குடுத்துப் பத்து நாளாவது சார்....''

ரகசியமாய்க் கடிதம் வந்த தேதியைப் பார்த்தான் சபேசன்.



## திருந்திய திருடன்

கர்நாடகத்தில் உள்ள கங்காவதி என்ற ஊரில் தபாலாபீஸில் ஒரு திருடன் வந்து 49821 ரூபாயைத் திருடிக் கொண்டு போய் விட்டான். மறு நாள் நகரில் உள்ள ஒரு தபால் பெட்டியில் அந்தப் பணம் இருந்ததைக் கண்டு தபால்காரர் திகைத்தார். பணத்துடன் இருந்த ஒரு கடிதத்தில்: ''ஒரு வியாபாரம் ஆரம்பிக்கப் பணத்தைத் திருடினேன். ஆனால் பிறகு மனம் வருந்தினேன். நான் செலவழித்த 350 ரூபாய் போக மீதிப் பணத்தைத் திருப்பி அனுப்புகிறேன். அந்த 350 ரூபாய் பினனால் வட்டியோடு திருப்புகிறேன். பணம் திருப்பப் பட்டு விட்டதால் இந்த விஷயத்தை இத்தோடு விட்டு விடுங்கள்.''

டெக்கான் ஹெரால்டிலிருந்து
அனிதா ராமச்சந்திரன்



வாஸ்தவம். பத்து நாட்களுக்கு மேலாகி விட்டது. தப்பு அவன் பேரில்தான்.

''சரி, சரி...போயிட்டுப் பிறகு வாங்க...''

அந்தக் கடிதத்திற்குப் பதில் எழுதும் முயற்சியில் இறங்கினான் சபேசன். முந்தைய கடிதங்கள் அடங்கிய ஃபைலைத் தேடினான். கிடைக்கவில்லை. எங்கேயாவது ரிக்கார்டு ரூமில் புழுதிகளுக்கு நடுவில் கிடக்கும். தூசிதட்டித் தேடி எடுக்க வேண்டும். சை! என்ன பிழைப்பு.

''சார் உங்களை அக்கவுண்டண்ட் கூப்பிடுறார் சார்...''

எழுந்து போனான்.

அவன் சமர்ப்பித்திருந்த கேஸ் கட்டு ஒன்றில் ஏதோ தவறாம். சுட்டிக் காட்டினார் கிழவர்.

பதில் பேசாமல் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தான்.

''சரி... நல்லாப் பார்த்து மறுபடியும் அனுப்புங்க...''

கேஸ் கட்டைக் கையில் கொடுத்து அனுப்பினார் அக்கவுண்டண்ட் கிழவர்.

''என்னடா சபை... கொஞ்சம் ஓவர் டோஸ் போலிருக்கு. மூஞ்சி ஜிவு,ஜிவுன்னு இருக்கே...''

இவனிடம் பதிலை எதிர்பார்க்காமல், பேசிக் கொண்டே சாப்பிடப் போனான் ஸ்டீபன்.

கேஸ் கட்டை மேஜையின் மீது பொத்தென்று வைத்துவிட்டு நாற்காலியில் அமர்ந்தான் சபேசன். பெருமூச்சு வாங்கிற்று.

வயிற்றைப் பசிக்கவே, டிபன் பொட்டலத்திற்காக மேஜை இழுப்பறையைத்திறந்தான். காலையில், அவசரத்தில் டிபன்பொட்டலத்தைக் கொண்டு வரவில்லை.

ஹோட்டலுக்குப் போனான்.

கூட்டம். பொங்கி வழிகிற கூட்டம். உட்கார இடம் கிடைக்கவே காத்திருக்க வேண்டியிருந்தது. கிடைத்த இடத்தில் உட்கார்ந்து, கிடைத்ததை ஏதோ சாப்பிட்டு விட்டு வெளியே வந்தான்.

ஆளையே உருக்கி விடுகிற மாதிரி வெயில் பாகாய் வழிந்தது.

மீண்டும் தன் இருக்கையில் அமர்ந்தான் சபேசன்.

ஏதேதோ கேஸ் கட்டுகள்.

சிலவற்றிற்குப் பதில் எழுதினான். சிலதில் தவறுகளைக் குறிப்பெடுத்தான். அக்கவுண்டெண்ட் திருப்பியனுப்பிய கேஸை மீண்டும் பரிசீலித்தான்.

நேரம் நழுவிற்று.

மணி ஐந்தாயிற்று.

ஒருவழியாய் அலுவலகத்தை விட்டு வெளியே வந்தான்.

வயிற்றைப் பசித்தது.

ஹோட்டலுக்குப் போகலாமா என்று நினைத்தான்.

கூட்டத்தை நினைத்ததும் அலுப்பாய் இருந்தது.

சாலையில் ஒரே கும்பல்...

''என்ன சார் கூட்டம்?''

''பஸ் இல்லையாம் சார்... ஆட்டோ டிரைவருக்கும் பஸ் டிரைவருக்கும் தகராறும்... பஸ்ஸை நிறுத்திப்பிட்டானுக...''

எச்சிலைக் கூட்டி விழுங்கினான் சபேசன், வீட்டுக்கு எப்படிப் போவது?



''அந்த எழுத்தாளருக்குப் பல பத்திரிகை ஆசிரியர்கள் நண்பர்களாமே?''

''எல்லா ஆசிரியர்களும் 'இனிமேல் கதை எழுதாதே. நாம் நண்பர்களாகவே இருப்போம்' என்று சொல்லிவிட்டார்களாம்!'' —ஏ.வி. தேவன்



எலக்ட்ரிக் ட்ரெயின் தான்... ஏற்கெனவேயே கூட்டம் பிதுங்கும். இன்றைக்குக் கேட்கவே வேண்டாம். முட்டிமோதிப் போக வேண்டும். அது மட்டுமா? ஸ்டேஷனில் இறங்கி ஒரு மைல் நடந்தாக வேண்டும்.

ரயில்வே ஸ்டேஷனை நோக்கி நடந்தான். கையும் பையுமாய் நிறையப் பேர் ஸ்டேஷனுக்குப் போவதைக் கவனித்தபடியே வேகவேகமாய் நடக்கலானான்.

ஸ்டேஷனில் டிக்கெட் வாங்க க்யூ. பல்லைக் கடித்துக் கொண்டு, நின்று டிக்கெட் வாங்கி, கூட்டத்தில் மிதந்து ரயிலேறி, நசுங்கிக் கசங்கிப் பயணம் செய்து, கர்ப்பத்திலிருந்து பிதுங்கி வெளியே வருகிற மாதிரி ரயிலிலிருந்து வெளியே குதித்தான். சட்டை, பாண்ட்டெல்லாம் கசங்கி, உருமாறி, விதவித அழுக்குகள் டிஸைன்களாய்ப் படிந்து...

சாலையின் இதமான காற்று சற்றுச் சுகமாய் இருந்தது..

வேகமாய் நடந்தான்.

சாலையில் இருபுறமும் விதவிதமாய்ப் போஸ்டர்கள். சிலுக்கும் குலுக்கும் விதவிதமாய் நெளிந்தார்கள். ஆணும் பெண்ணும் பலவிதமாய் உருண்டு கொண்டிருந்தார்கள். ஒரு நிமிடம் நின்று உற்றுப் பார்த்தான்.

சட்டென்று மங்களத்தின் நினைவுவந்தது. அவள் சிரிக்கிற போது கன்னத்தில் விழுகிற குழி மனத்துள் சன்னமாய் நெருடிற்று.

'காலையில் கைநீட்டி அவளை அடித்துவிட்டோம். இப்போது போய்ச் சமாதானம் செய்ய வேண்டும்' என்று நினைத்துக் கொண்டான். உற்சாகமாய் இருந்தது. இரண்டு முழம் பூ வாங்கிக் கொண்டான். வேகவேகமாய் நடந்தான். மணி ஒன்பதை நெருங்கிற்று. குழந்தை சதீஷ் கூடத் தூங்கிப் போயிருப்பான். போய்ச் சாப்பிட்டுப் படுத்துக் கொள்ள வேண்டியதுதான்.

இரண்டு முழம் பூவைத் தலையில் சூட்டிக் கொண்டு மங்களம் பதவிசாய்ச் சிரித்தான்.

வியர்க்க, விறுவிறுக்க வீட்டை நெருங்கினான்.

பால்கனியில் மூன்று நான்கு குழந்தைகள். ஹாலில் யாரோ பேசுகிற சப்தம்.

யார் வந்திருக்கிறார்கள்?

''அப்பா ஊர்லேர்ந்து அத்தை, அத்திம்பேர் கோசி, லாவண்யா அம்பி எல்லாரும் வந்திருக்காப்பா!...''

கண் நிறைய உற்சாகத்துடன் கூவினான் சதீஷ்.

பெருமிதத்துடன் மாப்பிள்ளை தலையசைத்தார். வயிற்றில் ஆறு மாதத்துடன் தங்கை சிரித்தாள்.

ரூம், ஹால், கிச்சன் என்று சிறிய போர்ஷன். இதில் எட்டுப்பேர் படுத்துக் கொள்ள வேண்டும். ஹாலில் தான், மாப்பிள்ளை, சதீஷ் படுத்துக் கொள்ளவே இடம் போதாது. பெட்ரூமில் மற்றவர்கள்.

பூவை எடுத்துத் தங்கையிடம் நீட்டினான்.

''மாப்பிள்ளை சாப்பிட்டாச்சா? எப்போ வந்தீர்கள்? கடுதாசி போட்டா ஸ்டேஷனுக்கு வந்திருப்பேனே?...''

அன்புடன் வம்பு

# சிவாஜி...1,2,3!

### செய்தி—1

சிறு கறுவுக்கு எஸ். வி. சேகர் மீது கொஞ்சம் கோபமாம். சமீபத்தில் ஒரு நாடக உலக பிரமுகரிடம், ''என்ன எஸ். வி. சேகர் என்னே ரொம்பக் இன்டல் பண்ணுறாராமே தன் டிராமாவுல. சினிமா ஃபீல்டுலேயே தானும் இருந்துக்கிட்டு. இன்னொரு ஆர்ட்டிஸ்டைக் இன்டல் பண்ணறது அழகா இல்லேயே!'' என்று கேட்டாராம். பிரமுகரோ,''அதெல்லாம் ஒண்ணுமில்லீங்க; மேஜரைத்தான் எங்க டிராமாவிலே இமிடேட் பண்றோம். சிவாஜிய இல்லே அப்படின்னு சேகர் சொல்றாரு'' என்று சமாதானப்படுத்தினாராம்.

### செய்தி—2

சிவாஜி நாடகம் நடிக்க ஆரம்பிக்கலாமா என்று சீரியஸாக யோசித்துக் கொண்டிருக்கிறாராம். கோமல் சுவாமிநாதனைப் பார்த்த போது, ''நமக்கு நல்லா ஒரு நாடகம் எழுதுங்களேன். நம்ம பையன் பிரபுவுக்கு முக்கிய ரோல் வரட்டும். எனக்குக் கடைசில இரண்டு சீன்ல வந்து, அமர்க்களமா டயலாக் பேசி பார்க்கிறவங்களைக் கதற வைச்சிடணும். அதுமாதிரிப் பாத்துக்குங்க. கைநெறைய சன்மானம் வாங்கிக்குங்க. அட்வான்ஸ் உடனே தரவா?'' என்று கேட்டாராம்.



### செய்தி—3

இ. காங்கிரஸ் பிரமுகர் ஒருவர் தம் சொந்தப் படத்தில் நடிக்க சிவாஜியிடம் கேட்க, அவரும் ஒப்புக்கொள்ள, ''ரேட்டைக் கொஞ்சம் குறைச்சுக்குங்க. கட்சிக்குப் பணம் செலவழிக்கிறதா இருக்கேன்'' என்றாராம். ரேட்டைக் குறைக்க முடியாதென்று கண்டிப்பாய்ச் சொல்லி விட்டாராம் சிவாஜி. பிரமுகர் டெல்லி போனபோது, அம்மையாரிடம் விஷயத்தைச் சொல்லிவிட, அம்மையார், சிவாஜியிடம் இது பற்றி விசாரிக்க, சிவாஜி ஊர் திரும்பியதும், பிரமுகரிடம் ரேட்டைக் குறைத்துக் கொள்வதாய்ச் சொல்ல, அவரோ, ''ஸாரி! சகல கலா வல்லவனையே புக்பண்ணிட்டேன்'' என்று சொல்லிவிட்டாராம்.

—ஜூலி, நில்லப்பா



'ஆறிலும் சாவு — நூறிலும் சாவு' என்பதை ஆறு வயதிலும் சாவு, நூறு வயதிலும் சாவு என்று பொருள் கொள்கிறோம். இது தவறு என்கிறார் இரு மஞ்சக்குடி ராஜகோபால சாஸ்திரிகள்.

குருக்ஷேத்திரப் போருக்கு முன்னதாக குந்தியிடம் கர்ணன் கூறுகிறான்: ''தாயே! நான் பாண்டவர் ஐவருடன் சேர்ந்து ஆறாவது ஆளாகப் போரிட்டாலும் சரி, அல்லது கௌரவர்கள் நூறு பேரோடும் சேர்ந்து நூறாவது ஆளாக (துரியோதனனுக்கு முன்னர்) போரிட்டாலும் சரி மடிவது திண்ணம். ஆறிலும் சாவு, நூறிலும் சாவு. எப்படிச் செத்தால் என்ன? செஞ்சோற்றுக் கடன் கழிக்க என்னை வளர்த்து ஆளாக்கிய துரியோதனனிடமே இருந்து உயிரை விடுவேன்.''

—எஸ். மாரியப்பன்



## LIBRA
### IN ACTION



DEDICATED TO REPUTED PERSONALITY'S ACTION ABLE BRIEFS, VESTS & SPORTS WEAR



**LIBRA HOSIERIES**
TIRUPUR

## Join at Once

### EFFICIENT POSTAL TUITION

1. M.B.A., M.B.M., D.B.A., A.M.I.B.A., B.G.L., M.A., M.COM.,
   (FOR DEGREE HOLDERS)
2. D.COM., I.COM., B.COM., B.COM(HONS)., M.COM., ALL ONE SITTING.
   (S.S.L.C./H.S.C./P.U.C./INTER PASSED OR FAILED ARE ALLOWED)
3. OSMANIA B.A., B.COM(ONE SITTING)
   (FOR P.U.C./INTER H.S.C./ CANDIDATES)
4. B.A., B.COM., M.A.,(M.U.)
   (NO PREVIOUS QUALIFICATION REQUIRED)
5. A.M.I.E., A.M.I.MECH. E EQUIVALENT TO B.E.,
   (FOR S.S.L.C./P.U.C./H.S.C. CANDIDATES)
6. ALLOPATHY
7. E. HOMOEOPATHY
8. S.S.L.C., 9. H.S.C.,

**POPULAR AND EFFICIENT INSTITUTE IN THE WORLD**

*For Particulars Send Rs. 3/- by M.O.*

**SRI MURUGAN TUTORIALS**
(ESTD:21-3-1952 GOVT.REGD.NO.3072)
H.O. : RISHIVANDIYAM-606 205 (T.N.)

R.O. : 41, ARCOT ROAD
KODAMBAKKAM, MADRAS-600 024

● ''பெண்கள் இதிஹாமா தனியாக நிற்க வேண்டும்?'' என்ற கட்டுரை சிறப்பானது; நல்ல நோக்கம் கொண்டது என்பதை மனம் விட்டுப் பாராட்டக் கடமைப் பட்டிருக்-கிறேன். தமிழ் நாட்டில் உள்ள எட்டு லட்சம் மாநில அரசு ஊழியர்களுக்கென்று பல்வேறு அமைப்புக்கள் இருக்கும் நிலையில் அதுவே ஊழியர் நலனுக்கு ஊறு விளைவிப்பது (பல்வேறு சங்கங்கள் இருப்பது) என்ற கருத்து வலுவாகும் சமயத்தில் – மகளிருக்கெனப் புதிய அமைப்பு வரவேற்கத்தக்கதல்ல என்ற தங்கள் கட்டுரையின் கருத்தை மிக மிகப் பாராட்டுகிறோம்.

'தொழிற் சங்கங்களில் நிர்வாகப் பதவிகளை அடைய முடியாத பெண்களின் ஏமாற்றம் இந்தப் புது அமைப்புக்குக் காரணமாக இருக்குமோ' என்று கட்டுரையின் கடைசிப் பகுதி கூறுகிறது. இல்லை. அந்த ஊழியர் அமைப்புக்களில் அவ்விதத் தடைகள்ளதுவும் இல்லை. இன்னும் சொல்லப் போனால் பெண்களைப் பொறுப்புக்களில் அமர்த்த – அவர்களுக்காக விட்டுக் கொடுக்க – நாங்கள் தயாராக இருக்கிறோம். ஆனால் குடும்பப் பணி காரணமாகப் பலர் முன்வருவதில்லை.

சென்னை-5 சிவ. இளங்கோ

தலைவர், தமிழ்நாடு அரசு ஊழியர் சங்கம்

● தமிழ்நாடு அரசு ஊழியர் சங்கம் என்ற பொது சங்கம் இருந்த போதிலும் அநேகமாக அரசின் அனைத்து இலாகாக்களுக்கும் தனித் தனியே ஒரு சங்கம் செயல்பட்டுக் கொண்டு தான் வருகிறது. இதனால் பொதுவாய் உள்ள தாய்ச் சங்கம் எவ்விதமான பலவீனமோ, பிளவோ அடைந்துவிடவில்லை. பெண் ஊழியர்களுக்கான தனிச் சங்கமும் இவ்வகையே.

திருக்கோவலூர் ஆர். சுப்ப ராவ்

● எஸ். அறிவுமணியின் ''சாவே இட்டலியோ' சிறுகதை மனித மனத்தின் ஆழத்தில் கிடக்கும் மனிதாபிமானம் பற்றிய உயர்ந்த கருத்துப் பெட்டகம்.

சீர்காழி அ. சுந்தரம்

● சேஷகோபாலன் பற்றிய 'வண்ணப் படக்கட்டுரை'இசை மழையாகவே பொழிந்து விட்டது.

ஸ்ரீரங்கம் ஆர். கோபாலன்

● என் அபிமான எழுத்தாளரின் 'டேக் நம்பர்–2 மர்ம நாவல் ஏ-1. கதைக்குப் பொருத்தமான ராமுவின் படமும் அட்டகாசம்.

சின்னசேலம் கோ. பாபு

● கல்யாண நவக்கிரஹப் பிரதிஷ்டை மான கிரியைத் தவிர தமிழ்நாட்டில் கருங்குளம், பழூர் என்ற இரண்டு இடங்களில் மட்டுமே இருப்பதாக ஆனந்தி குறிப்பிட்டுள்ளார். புதுக்கோட்டை நகரில் பொது




மனைக்கு அருகில் உள்ள முருகப் பெருமான் கோவிலில் கல்யாண நவக்ரஹ ப்ரதிஷ்டை செய்யப்பட்டு, மக்கள் வழிபட்டு வருகிறார்கள்.

புதுக்கோட்டை ஜே. சுரேஷ்குமார்

● பெருந்தலைவர் காமராஜரின் கொள்கைகளைக் காற்றில் பறக்க விட்டு விட்டு, அவருக்கு விழா எடுக்கும் இன்றைய அரசியல்வாதிகளின் சுயநலப் போக்கைத் தலையங்கத்தின் மூலம் தெளிவாகச் சுட்டிக் காட்டியமைக்கு நன்றி.

குளச்சல் எம். முகம்மது இப்ராஹிம்

● தன்னலமற்ற தூய எண்ணத்துடன் தியாகம் புரிந்த தமிழகத்தைச் சேர்ந்த தலைவர்களுக்கு விழா எடுத்து வரும் தமிழக முதல்வரின் எண்ணத்திற்குக் களங்கம் கற்பிக்க முயன்றிருப்பது வேதனைக்குரியதாகும்.

போடிநாயக்கனூர் எஸ். சையது முகமது

● ஆங்கிலம் கலக்காமல் எழுதக் கூடாதா என்று துனுக்கில் கேட்டிருக்கிறார் சரவன். விடிந்தது முதல் இரவு படுக்கப் போகும் வரை நாம் பேசும் தமிழில் குறைந்தது 10 சதம் ஆங்கிலச் சொற்கள் உபயோகிக்கிறோம்! கிராமவாசி பேசும் தமிழில் கூட ஆங்கிலம் கலக்கப்படுகிறது. தமிழ்க் கதைகளில் எவ்வளவோ சம்ஸ்கிருத – ஹிந்தி சொற்கள் தமிழ் வடிவத்தில் கலக்கின்றன. அப்படி இருக்க ஆங்கிலம் கலப்பது தவறு இல்லை.

மன்னார்குடி பி. ஆர். பார்த்தசாரதி

● முதல் தடவையாக தியாகராஜன் கதாநாயகனாக நடிப்பதும் முதல் தடவையாக ராஜசேகர் டைரக்ட் செய்வதும் மலேசிய மம்பட்டியானில் அல்ல. ஜெயமன்மதன் விமர்சித்தால் போதாதா? புது தகவல் தருகிறேன் என்று தவறான விவரங்களைக் கொடுப்பானேன்?

புதுவை கோ. முருகன்

# இரும்பு குதிரைகள்

பாலகுமாரன்

## அத்தியாயம் 31

கடற்கரை முதல் சாலையில் வாகன நடமாட்டம் குறைந்த பிறகு இரவு பத்து மணி பத்து நிமிடத்துக்கு முதல் லாரி விஸ்வநாதன் கார் அருகே நின்றது.

''ரப்பர் லோடா சார்.''

தன் கம்பெனி குமாஸ்தா ஒருவனை அந்த லாரியில் ஏற்றி விக ஹார்பருக்குள்ளே அனுப்பினான். இன்னொரு லாரி வந்தது. மறு ஆளை அனுப்பினான். இன்னொரு லாரி வந்தது. இன்னொருவனை அனுப்பினான். பத்து நாற்பதுக்கு மோட்டார் சைக்கிளில் வடிவேலு கடந்து ஹைகோர்ட் பக்கம் போக நாலாவது லாரி வந்தது. கடைசிக் குமாஸ்தா லாரியில் ஏறினான். அரை மணியில் முதல் லோடு வெளியேறிற்று. இரண்டாவது லோடு பத்தாவது நிமிடம் தொடர்ந்தது.

நாலைந்து பேர் கும்பலாக வந்து விஸ்வநாதன் காருக்கு அப்பால் நடை பாதையில் உட்கார்ந்து கொண்டார்கள். ஓர் அரசியல் கட்சிப் பேப்பரை விரித்துப் படிக்கிற பாவனையை மேற்கொண்டார்கள். மோட்டார் சைக்கிள் இப்போது எதிர்ப் பக்கம் கடந்து போயிற்று. வடிவேலு திரும்பிப் பார்த்துக் கொண்டே போனான்.

நாணு ஐயர் மாடியிலிருந்து வடிவேலு கடையைப் பார்த்துக் கொண்டிருந்தார். காயத்ரி அருகில் இருந்தாள்.

''ஏதாவது கலாட்டா ஆயிடுமாப்பா?''

''வடிவேலு மகா கெட்டிக்காரம்மா. காசு அவனைக் கெட்டிக்காரனாக்கி யிருக்கு. மேலே காசு வர வர அவன் இன்னும் சூட்சுமமா வேலை செய்வான்.''

''அடிச்சுக் கிடுச்சுப் பண்ணிடப் போறாங்கப்பா....''

''வடிவேலு பத்து ஆளை அடிப்பான்.''

''நான் வடிவேலுவைச் சொல்லலேப்பா. விஸ்வநாதன் ஹார்பர் வாசல்லே நிப்பார் இல்லையா?''

''அட அவரைச் சொல்றயா? என்ன பண்றது? ரிஸ்க்தான்.''

வடிவேலு மோட்டார் சைக்கிள் வெளிச்சம் போட்டபடி தெருவுக்குள் நுழைந்தது.

''தலைவரே, தலைவரே....'' யாரோ சிலர் கூவிக்கொண்டு வந்தார்கள்.

''ஹார்பர்ல இங்கிலீஷ் கம்பெனி லோடு அடிக்கிறாங்க.''

''யார்ரு அது இங்கிலீஷ் கம்பெனி?''

''ரப்பர் பால் லோடு.''

''யாரு காண்ட்ராக்ட்டு?''

''காந்தி லால் ட்ரான்ஸ்போர்ட்.''

''அவன் வண்டி ஒண்ணும் ஓடலியேடா.''

''மாவுக் கம்பெனி லாரில அடிக்கிறாங்க.''

''மாவு லோடா இருக்கும்.''

''இல்ல தலைவரே. கண்ணால பாத்தோம். ரப்பர் பாலு. ஆளுங்களை இட்டாந்து மடக்கிடலாமா?''

''சும்மா இருங்கடா. காந்தி வண்டியானு மடக்கலாம். கூலி ஆளுங்க யாரு?''

''ஹார்பர் ஆளுங்க.''

''வண்டி ஓட்டறது?''

''மாவு கம்பெனி டிரைவருங்க.''

''என்னடா பண்ண முடியும்? அது ப்ரைவேட் வண்டியாச்சே?''

''ரப்பர் லோடு எப்படி ஏத்தலாம்?''

''கம்பெனிக்குக் கம்பெனி பேசியிருப்பான். மாவுக் கம்பெனில வண்டி கேட்டிருப்பான். காந்திலால் இல்லாட்டி மூடிட முடியுமா?''

''எப்படினு மடக்கிடணும் தலைவரே.''

''மடக்கறது என்ன? சர்சர்னு கல்லு வுட்டா தானு நிக்குது என்ன தலைவரே.''

''சும்மா இரு. மாட்டிக்காதே. கம்பெனி வண்டில கல்லு அடிச்சா உள்ற தள்ளிடுவானுங்க.''

''ஆயிரம் பேரு தலைவரே. பொழப்பும் போச்சே... லோடு ஏத்தறது வழக்கமா நாங்கதானே.''

''காந்திலால் கிட்டப் பேசுங்க தலைவரே.''



''நீங்க தொடர் கதை எழுதறேன்னு சொன்னபோது நான் நம்பலேங்கறது உண்மைதான்... இப்ப நம்பறேன்... ஆளை விடுங்க!'' —அமுதன் மைந்தன்



''அவன் கதவைத் தொறக்கமாட்டான்.''

''வாசல்ல நின்னு கூச்சல் போடுவோம். இருபது ரூபா கூலி போச்சே.''

''ரூபா ரூபான்னு கூவாதடா. சாயந்தரம் துட்டு வாங்கினல்ல எங்கிட்டே.''

''அதுக்கில்ல தலைவரே.''

''இந்தா போய் எனக்குப் பிராந்தி வாங்கிவா. அப்படியே உனக்கும் எதுனா வாங்கிக்க.''

''அப்ப மடக்க வேணுங்கறியா?''

''எப்படிடா மடக்கறது. யோசிப்போம்.''

''தலைவரே தலைவரே...!'' மேலும் நாலு பேர் ஓடி வந்தார்கள். ''நம்ம குப்பன் ஹார்பர்ல வண்டியை மடக்கிக் கேள்வி கேட்டா மாதிரி. வண்டிக்காரன் பதில் சொல்லாதப் போய்ட்டா மாதிரி. நடுவுல எவனோ பூந்து நீ என்னடா கேள்வி கேட்கிறேன்னு குப்பன் பொடரிலயே போட்டு அனுப்பிச்ச மாதிரி. மூச்சிரைக்கப் பேசினார்கள்.

**வி**ஸ்வநாதன் தவிப்புடன் நின்று கொண்டிருந்தான்.

பேசிக்கொண்டிருக்கும்போதே தபதப வென்று அடித்து விட்டார்கள்.

கட்சிப் பத்திரிகை படித்தவர்கள் வண்டி மடக்கினவனைச் சூழ்ந்து நொறுக்கி விட்டார்கள். இரண்டு நிமிடத்தில் அவனை அப்புறப்படுத்தி விட்டார்கள். அடிபட்டவன் இரைந்து கொண்டே ஓடிவிட்டான். இது முடிந்த மாதிரியா? இல்லை, தொடருமா? மேலும் ஆட்கள் வண்டியை மடக்க வருவார்களா? கட்சிப் பத்திரிகை



படித்தவர்கள் இப்போது கும்பலாய் இல்லை. ரூமுக்கு ஒருவராய்ப் பிரிந்து அடுத்த மடக்கலுக்குக் காத்திருந்தார்கள். எல்லோரும் பளபளக்கிற பேனாக் கத்தி வைத்திருந்தார்கள்.

''மறுபடி வந்தா குடலை உருவிப்புடுவேன்...'' வண்டி மடக்கினவனிடம் உயர்த்திக் காட்டினார்கள். ''நீ கண்டுக்காத வாத்யாரே.'' விஸ்வநாதனை நோக்கிக் கண் சிமிட்டினார்கள். கத்தியின் பளபளப்பு சில்லென்று பயத்தைக் கொடுத்தது விஸ்வநாதனுக்கு.

மறுபடி கலாட்டா நடந்தால் தான் ஓடித் தப்பித்து விடலாம். ஆனால் உள்ளே இருக்கும் கம்பெனி ஆட்கள். பதினொன்றோடு முடிந்திருக்கிறது. இன்னும் பத்தொன்பது வேரோடு போக வேண்டும். இதோ பன்னிரண்டு. பின்னால் பதின்மூன்று. ச்சே... என்ன வேலை. சரக்கென்று ஒரு கத்திக் குத்து விழுந்தால்... தாரிணி என்ன செய்வாள்?

நல்ல வேளை. அவளுக்கு போன் பண்ணிச் சொல்லியாயிற்று.

கடற்கரைநோட்டலிலிருந்துகாயத்ரி வடிவேலு வுக்கு போன் செய்தவுடன் தாரிணிக்கு அங்கிருந்தே பேசியாயிற்று. இரவு முழுக்க வேலை என்று தெரிவித்தாயிற்று. ஆனால் இந்த வேலை எப்போது முடியும்? கவிதை இருக்காதே என்று ஆபீஸ் கட்டளை இட்டிருக்கிறது. இங்கே வந்து நான் இருக்கிற லட்சணத்தை ஆபீசில் யாரும் பார்க்கவில்லை. உயிரைப் பணயம் வைத்துத் தெருவில் நின்று கொண்டிருக்கும் அவலம் எவருக்கும் தெரிய நியாயமில்லை. ஒருவேளை காயத்ரிக்குத் தெரியுமோ?

காயத்ரி இப்போது என்ன செய்து கொண்டிருப்பாள்? தூங்கியிருப்பாளோ? மணி என்ன... பதினொன்று நாற்பது. தூங்கியிருப்பாள். கவிதை சொன்னதும் அந்த முகம் கன்றிப் போயிற்று. விழி முழுவதும் சோகம் கனத்துப் படர்ந்தது.

''வருத்தப்படுவதை நீங்கள் அதிகம் விரும்புகிறீர்களா, விஸ்வநாதன்?'' எவ்வளவு குட்சுமமான கேள்வி கேட்டாள்!

''வருத்தம் வாழ்க்கையின் ஒரு பகுதியான பிறகு மறுதலிப்பது முடியுமோ காயத்ரி?''

''முடியாதுதான். அமைதியாய் ஏற்கலாமில்லையா?''

''ஏற்பது பற்றிய கவிதைதானே இது?''

''சரி.''

''ஏன் கவிதை சரியில்லையா?''

''வருடிக்கொள்ளக்குநிரைக்கு வசதியில்லை என்பது என்ன?''

''எந்த ஆறுதலாலும் வருத்தம் கொடுத்து விட்டு மன்னிப்பு கேட்பதாலும் வருத்தம் போகாது என்பதைச் சொல்கிறேன்.''

''அடுத்தவனே வருடிக் கொடுத்தால்?''

''வாட் டு யூ மீன் காயத்ரி.''

''ஒன்றுமில்லை.''

''பரவாயில்லை. சொல்லுங்கள்.''

''சொல்ல ஏதும் இல்லை. என் வார்த்தைகள் நீங்கள் சொல்வது போல் வருத்தம் தீர்க்காது. மறுபடி இதமாய் நடத்துகொள்ள வேண்டும். சவுக்கே எடுக்காது எறிந்து விடவேண்டும். உங்கள் எல்லாக் கவிதைகளும் எனக்கு வேண்டுமே விஸ்வநாதன்.''

''ஒன்று செய்கிறேன். இரவு நீண்ட கவிதை ஒன்று எழுத முயற்சி செய்கிறேன். நாளை காட்டுகிறேன்.''

''நிச்சயமாய்?''

''நிச்சயம்.''

''ஆல் த பெஸ்ட் விஸ்வநாதன்.''

இதோ பதினாறு.... பதினைந்து.... இன்னும் பதினைந்து ட்ரிப்தான். விடியும் முன் முடிந்து விடும். கவிதை எழுத ஆரம்பிக்கலாமா? என்ன எழுதுவது... விஸ்வநாதன் ரூமுக்குள்ளிருந்த டைப்ரைட்டரை நகர்த்தினான்.

கல் தோன்றி மண் தோன்றி கடவுள்
தோன்றி
கைவழியே மொழி வளரும் காலம் தோன்றி
கால்நடையைச் செல்வமெனக் கொண்ட
நாளில்
ஆண்டிருந்த ஓரரசன் பறையறிவித்தான்.

## அருள்வாக்கு

யாருமே இன்னொருவரிடம் தோற்றுப்போனால் அவமானம்தான் கொள்வார். ஆனால் இதற்கு ஒரு விதிவிலக்கு உண்டு. சொந்தப் பிள்ளையிடம் தோற்றுப்போனால் மட்டும் அவமானத்துக்குப் பதில் பெருமையாகவே இருக்கும். பரமேசுவரனும் கூடத் தன்னாலேயே வதைக்க முடியாத தாரகாதி அசுரர்களைத் தன் குமாரனான சுப்பிரமணியன் சம்ஹாரம் செய்ததில் பெருமையே கொண்டார். இதற்கு முன்னால் தக்ஷிணாமூர்த்தியாக, மூல குருமூர்த்தியாக இருந்த அவரே சுப்பிரமணிய சுவாமியிடம் பிரணவ உபதேசம் வாங்கிக்கொண்டு தன்னைவிட ஒருபடிபிள்ளையை உயர்த்திக்காட்டிப்பெருமையடைந்தார். இப்படியாக ஈசுவரன் ஞானம், வீரம், இரண்டிலும் தன்னை விடத் தானே அதிகப் பிரகாசமான ரூபமெடுத்துக் கொண்டு சுப்பிரமணியராக வந்ததற்குக் காரணம் அம்பாளின் சேர்க்கைதான். காமன் எரிந்த பின் அவன் கரும்பு வில்லும், மலர் அம்பும் தரித்துக் காமேசுவரியாகி இவரைத் தன்னிடம் அன்பு கொள்ள வைத்தது தான் இத்தனைக்கும் காரணம்.

இந்தப் புராணக் கதைக்குத் திருஷ்டாந்தமாகவே இன்றைக்கும் காஞ்சீபுரத்தில் ஏகாம்பரநாதர் ஆலயத்துக்கும் காமாக்ஷியம்மன் ஆலயத்துக்கும் நடு மத்தியில் குமர கோட்டம் என்கிற சுப்பிரமணியர் ஆலயம் இருக்கிறது.

- ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்

---

தஞ்சை மாவட்ட எங்கள் ஸ்ரீ வேலவன் நித்திய பூஜை அறக்கட்டளைக்கு பொது மக்கள் தங்கள் நன்கொடைகளை எவ்வித செலவுமின்றி எங்கள் வங்கியின் எல்லாக் கிளைகளின் மூலமும் அனுப்பலாம்.




## அட்டைப் படத்தில் அனிதா

குமாரி அனிதாவைப் பார்த்தாலே நமக்குச் சுறுசுறுப்பு வரும். அப்படி துருதுருவென்று காரியங்களைச் செய்யும் இவர், பெண்கள் கிறிஸ்துவக் கல்லூரி மாணவி. முதலாண்டு பி.ஏ., இலக்கியம்.

இலக்கியம் தவிரத் தெரிந்த விஷயங்கள்: (1) நடனம் – பாராட்டு: சண்டாளிகா நாட்டிய நாடகத்தில். (2) சமையல் – எக்ஸ்பர்ட் வட இந்திய பாணி உணவில். (3) கார்டூன் – சிரிக்க வைத்தவை சர்தார்ஜி ஜோக்ஸ்.

ரொம்பப் பிடித்தது 'கதக் நடனம். பிடிக்காதது அதை ஆடிய பிறகு தோன்றும் உடல் வலி! —"ரிஷி"

வண்ணப்படம்: உத்ரா



வீட்டிற்கொரு குதிரை வளர்க்க வேண்டும்.
வேண்டுகின்ற உதவிகள் அரசு செய்யும்.
குதிரைகளே தேசத்தின் செல்வமாகும்
போர் வந்தால் புரவிகளை அரசே வாங்கும்
போர்காலம் காணாத அரசு இல்லை
போராட்டம் இல்லாத காலம் இல்லை.
போர்காலம் முன் கருதி புரவி வளர்ப்பீர்.
பின் வளரும் சந்ததிக்கு உறுதி கொடுப்பீர்.
மீறுபவர் தேசத்தின் முதல் எதிரிகள்
மறுப்பவர்கள் வெளியேற்றப் படுவார் உறுதி.
பறையடித்து ஊர் முழுதும் சேதி சொல்ல
ஜனம் கூடி தெரு நடுவே புலம்பலாச்சு.
இவனென்ன பேயரசன் குதிரை வெறியன்!

சட்டென்று டைப்ரைட்டர் நின்றது. எதிர்ப் பக்கம் ஒரு கார் வெளிச்சம் போட்டபடி நிற்க விஸ்வநாதன் கவிதையைக் கலைத்தான். இது பாஸ். முதலாளி. இவர் எதற்கு இங்கே.

"விஸ்வநாதன்" கூப்பிடும் குரல் கேட்டு விஸ்வநாதன் எதிர்ப் பக்கம் ஓடினான்.

"சரக்கு அனுப்ப ஆரம்பித்து விட்டாய் போலிருக்கே." எம். டி. வண்டியை விட்டுக் கீழிறங்கினார்.

"எஸ் ஸார். குட் ஈவினிங் ஸார்."

"வெரி குட்மார்னிங் விஸ்வநாதன். மணி இப்போ பன்னிரண்டு நாற்பது. முடிச்சிடுவாயா?"

"முடிஞ்சிடும் ஸார். . நீங்க ஏன் சார் இங்கே...."

"ஜஸ்ட் வாண்ட் டு ஹேவ் எ லுக். ப்ராப்ளம் ஒண்ணுமில்லையே?"

பிரிந்த அடியாள் கும்பல் காரைச் சூழ்ந்தது. ";என் வாத்யாரே, என்னாச்சும் ட்ரபுளா?"

"ஒண்ணுமில்லேப்பா. இது எங்க முதலாளி."

"கும்புடறேங்க."

"யார் இவர்கள்?" எம். டி. புருவம் தூக்கினார். விஸ்வநாதன் சகலமும் ஒப்புவித்தான்.

"காட்... அடிதடியா... எதற்கு இவ்வளவு ரிஸ்க்."

"வேறே வழியில்லே சார்."

"போலீஸ் கூப்பிடலாமா?"

"வேண் ாம். அது இன்னும்பிரகாசமாய்ப் போய்விடும் சார்."

"மை காட்! இத்தனை ரிஸ்கில் இங்கு நின்று என்ன செய்கிறாய்?"

விஸ்வநாதன் நிமிர்ந்தான். "ஒரு கவிதை பாதியில் நிற்கிறது சார்."

"டாமிட். உனக்குக் கவிதை எழுத இடமே இல்லியா?"

விஸ்வநாதன் சிரித்தான்.

"எவ்வளவு போயிற்று?"

"பாதிக்கு மேல் போய் விட்டது. இதோ பதினாறு." லாரி கடந்து பின்னால் இன்னொரு வண்டி வெளிச்சம் போட்டது. "இது பதினேழு."

"போதும். விட்டுவிடு. இவ்வளவு ரிஸ்க் இருப்பது எனக்குத் தெரியவில்லை. மீதிக்கு அபராதப் பணம் செலுத்துவோம்."

"ஸாரி. வாடகை பத்தாயிரம் ஒப்புக் கொண்டிருக்கிறேன் ஸார். நீங்கள் இங் இருப்பது நல்லதில்லை. மறுபடி இன்னொரு சண்டை எதிர்பார்க்கிறேன். நகர்ந்து விடுங்கள்."

"எனக்கு நீ செய்வது சரியென்று தோன்றவில்லை விஸ்வநாதன். சரக்கு சேதமானாலும்... உள்ளே இருப்பவர்கள்... நீ இவ்வளவு ஆபத்தில் நிற்பது சரியல்ல. வா என்னோடு."

"இருக்கட்டும் சார். கிளம்புங்கள்." வண்டியில் அவரை மெல்லத் திணித்துக் கதவைச் சாத்தினான்.

"ஒன்று செய்கிறேன் விஸ்வநாதன். நான் கடற்கரைப் பாலத்தருகே நிற்கிறேன். கடைசி லாரி கூடவே உன் வண்டி வருமில்லையா. என்னோடு அங்கே சேர்ந்து கொள்ளுங்கள். மைண்ட் யூ விஸ்வநாதன். உன் கவிதை இருக்கட்டும். கவனமாய் இரு." கார் திரும்பிக் கடற்கரைப் பக்கம் போயிற்று.

அடியாட்கள் சற்று அசந்து நின்றிருந்தார்கள். பெரிய கல் ஒன்று விஸ்வநாதன் கார் மீது விழுந்தது. யாரோ 'டாய்' என்று கூவினார்கள். சரமாரியாய்க் கல் எறிந்தார்கள். அடியாட்கள் பலிச்சென்று சிதறிப் பதிலுக்குக் கல்லும் தயாராய் வைத்திருந்த சோடாப் பாட்டிலும் எறிந்தார்கள். கோர்ட் பக்கமிருந்து இரண்டு பேர் நடந்து விஸ்வநாதனைக் கடந்து போனார்கள். நின்றார்கள். திரும்பினார்கள். விநாடி நேரத்தில் அவன் மீது பாய்ந்தார்கள். மூட்டை தூக்குகிற குத்தூசியை ஒருவன் பலம் கொண்ட மட்டும் விஸ்வநாதன் தோளில் பாய்ச்சினான். இழுத்தான். கோணிமாதிரி சட்டையோடு விஸ்வநாதன் தோளும் கிழிந்தது.

(தொடரும்)

# நில மடந்தையும் பூ மடந்தையும்



ஆனந்தி

நாச்சியார்கோவில் கும்பகோணத்தி லிருந்து சில மைல் தொலைவில் இருக்கிறது. தாயார் பெயரால் அழைக்கப்படும் ஊராக இருப்பதோடு இன்னொரு விஷயத்திலும் பெண்கள் மனத்தைக் கவருகிறது இந்த ஊர். இங்கே செய்யப்படும் லட்சுமிகரமான வெண்கலக் குத்துவிளக்குகள் அகில உலகப் புகழ் பெற்றவை. வெண்கலப் பாத்திரங் களுக்குப் பேர்போன இடம்.

''வம்புஅவிழும் செண்பகத்தின் வாசம்உண்டு
மணிவண்டு வகுளத்தின் மலர்மேல் வைகும்
செம்பியன்கோச் செங்கணான் சேர்ந்தகோயில்
திருநறையூர் மணி மாடம் சேர்மின்களே''

என்று திருமங்கையாழ்வார் மங்களா சாஸனம் செய்த மங்கலமான தலம் நாச்சி யார் கோவில். ''எண் தோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட'' கோச் செங்கட் சோழன் என்று சிவா லயங்கள் கட்டிய சிறப்பைப் பாடுகிறாரே!

✕ கல் கருடன் நாச்சியார் கோவில்



எவ்வளவு பரந்த நெஞ்சம்! திருமங்கை மன்னர் பாடிய திருநறையூர்ப் பாசுரங்களைப் படிக்கும்போது கருத்தெல்லாம் தித்திக் கிறது.

நல்ல வெய்யில். நடையைச் சாத்தி விடாமலிருக்க வேண்டுமே என்று பரபரப் புடன் கோவிலுக்கு விரைகிறோம். கோவிலில் யாரையும் காணவில்லை. பெரிய பெரிய தூண்கள் நிற்கின்றன. சமீப காலத் திருப் பணி. இரண்டாவது கோபுர வாசலைத் தாண்டி உள்ளே சென்றால் நன்றென்று குளுமையாகவும் சற்று இருளாகவும் இருக் கிறது. அருள் நிழல் அல்லவா? ''வாவித் தடம் சூழ் மணிமுத்தாற்று நறையூர் நெடுமாலை, நாவில் பரவி, நெஞ்சில் கொண்டு நம்பி நாமத்தை — நங்கள் வினைகள் தவிர உரை''த் துக்கொண்டு படி ஏறுகிறோம்.

நல்லார் மறையோர் பலர் வாழும் நறை யூர் நம்பியின் கோவில். திருமண் தரித்த அர்ச்சகர் வருகிறார். அர்ச்சனை செய்து விட்டுத் தலபுராணத்தைக் கூறுகிறார்.

''மணிமுத்தாறு நதிக் கரையில் மகிழ மரத்தடியில் மேதாவி முனிவர் கண்டெடுத்த குழந்தை ஸ்ரீதேவி. வஞ்சுளவல்லி என்பது திருநாமம். கன்யாகல்கமாக ஸ்ரீதேவிக்குப் பிராதான்யம் கொடுத்ததால் நாச்சியார் கோவில் என்று பெயர் பெற்றது. விமானம் ஸ்ரீநிவாஸ விமானம். நறையூர் நம்பி என்று



✕ திரு வேங்கடாசலபதி ஸ்வாமி
ஒப்பிலியப்பன் கோவில்

மங்களாசாஸனம். இரு கரங்களுடன் மனுஷ்ய ரூபத்தில் சேவை. பிரும்மா நித்ய தரிசனம் செய்கிறார். தாயாருக்குத் தனிச் சந்நிதி இல்லாத கோவில் மூன்று. ஸ்ரீவில்லிப் புத்தூர் அருகில் உள்ள உப்பிலியப்பன் கோவில். இந்தக் கோவில். சேர்ந்தே சேவை சாதிப்பார்கள்.''

நாற்றெட்டுத் திருப்பதி அந்தாதியில் தாயாரின் பெயர் அன்ன வடிவழகி என்று காண்கிறது. மகிழம்பூவின் மணமும் அன் னம்போல் அழகும் உடைய தேவி. நறை என்றால் மணம் என்றும் தேன் என்றும் பொருள். மகிழ மரங்கள் மலர் உதிர்த்து மணம் பரப்பியதால் நறையூர் என்று அழைத்திருக்கலாம்.

''கலை கொண்ட பலங் கனிகள்
தேன்பாய, கதலிகளின்
இலை கொண்ட பழம் கெழுமித்
திகழ் சோலைத் திருநறையூர்''



உற்சவர், ஸ்ரீநிவாசன், வஞ்சுளவல்லி, நாச்சியார் கோவில்

என்றதால் தேன் பாயும் ஊர் என்றும் கூறலாம்.

எம்பிரான் பெயர் வடிவார் நம்பி. தாயார் வடிவழகி. தீர்த்தமோ எழில் வாவி. அழகும் மணமும் பொருந்திய தலம்.

கற்பூரச் சுடரின் ஒளியில் வெட்டுக் கல் விழைத்த இலகமணித்த தாயாரின் திரு-முகத்தைக் கண்டு பரவசமாகிறோம். சின்னச் சின்னக் கட்டம் போட்ட பச்சைப் புடவை உடுத்தி ஆடம்பரம் இல்லாமல் காட்சி யளிக்கிறாள். ஒரு காதில் தோடு மற்றொரு காதில் மகரக் குழை. கைகளில் வளையல்கள். அம்பாள் பூணூல் தரித்திருப்பதாகக் கூறு கிறார்கள். வைணவப் பெரியார்களும், தாயார் வடிவத்திலேயே எம்பெருமானையும் கண்டு களித்தனரோ?

இந்த அரிய விக்கிரகங்கள் சுதை பூசி மூடப்பட்டிருந்ததாகவும், சாம்பிராணித் தைலமிட்டுப் பாதுகாக்கப்பட்டு வந்ததாக வும் கூறுகிறார் அர்ச்சகர். இப்போது சுதை உதிர்ந்து திருமேனி அழகைக் கண் குளிரப் பார்க்க முடிகிறது. இன்றும் சாம்பிராணித் தைலம் பூசிக் காப்புச் செய்யும் பழக்கம் இருந்து வருகிறது. அந்நியர்கள் படை யெடுத்தபோது காப்பதற்காகச் சுதை பூசியிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

நாச்சியார்கோவில் கல் கருடன் புகழ் மிகுந்தவர். ஸ்ரீநிவாஸப் பெருமானை இவர் மீதுதான் திருவுலாவுக்கு எழுந்தருளப் பண்ணு வார்கள். வாசுதேவனையே தூக்கும் கரு டாழ்வாரையும் சேர்த்துச் சுமக்கிறார்கள் பக்தர்கள். இந்த அன்பர்கள் வைகுண்ட நகரத்தில் எளிதாக இடம் பிடிப்பார்கள். வீதி உலா முடிந்த பிறகு கருடாழ்வாருக்குப் பரிவட்ட மரியாதைகள் செய்து அனுக்ரகம் செய்வார் நறையூர் நின்ற நம்பி.

சிவாலயங்களில் வரவு செலவுக் கணக்கு சண்டேச நாயனார் பேரில் இருக்கும். வைண வத் தலங்களில் சேனைமுதலியாழ்வார்தான் கோவில் அதிகாரி. உற்சவங்களை நடத்தி வைக்கும் இவருக்கு இங்கே ஒரு சந்நிதி இருக்கிறது.

சற்று தூரத்தில் சிவாலயமும் இருக்கிறது. நடை சாத்தி விட்டபடியால் தரிசனம் கிடைக்கவில்லை. கோவில் கிணற்றிலிருந்து வாளியில் தீர்த்தத்தை எடுத்துத் தாகம் தீர்த்தோம். அமிர்தம்தான்.

• • •

ஸ்ரீதேவித்தாயாரின் இரு அவதாரத்தைத் தரிசித்தவுடனேயே பூதேவித் தாயார் பிறந்து செங்கண் மாலை மணந்த திருத்துழாய்வனத் தைக் காணும் மகத்தான பேறு கிடைத்து விட்டது.

மார்க்கண்டேயமுனிவர் மகாவிஷ்ணுவைத் தம் மருமகனாகப் பெற வேண்டும் என்று ஆசைப்பட்டார். அதற்காகத் தவம் செய்ய இடத்தைத் தேடும்போது துளசிச் செடிகள் மண்டியிருந்த ஓர் இடத்தைக் கண்டார். தவம் செய்து கொண்டிருந்தபோது மார்க் கண்டேய மகரிஷியின் எதிரில் இரண்டு வயதுடைய ஒரு குழந்தை வந்து நின்றது. ''யாரம்மா நீ?'' என்று முனிவர் கேட்டதும் ''எனக்குத் தெரியாது'' என்று கூறிவிட்டு ஓடிவந்து அவருடைய மடியில் அமர்ந்து கொண்டாள் அந்தக் குழந்தை. பூமியி லிருந்து தோன்றியதால் பூமி தேவி என்றே பெயரிட்டு வளர்த்தார் முனிவர்.

பூமி தேவிக்கு மணப் பருவம் வந்தது. முனி வர் கவலையோடு இருந்தபோது ஒரு கிழவர் வந்து சேர்ந்தார். முனிவரிடம், ''உம்மகளை எனக்குக் கொடும்'' என்று கேட்டார். மார்க் கண்டேயர் திகைத்துப் போனார். நெஞ்சம் கலங்க, நாக்குழற, ''என் மகள் குழந்தை யாயிற்றே ஐயா! சமைக்கும்போது உப்புப் போட வேண்டும் என்று கூடத் தெரியாதே'' என்றார்.

விளையாடியது போதும் என்று ஸ்ரீமந் நாரா யணன் தரிசனம் கொடுத்து பூமி தேவியைக் கேட்டபோது முனிவருக்கு எப்படி இருந்

உள்கோபுரம் கொடிமரம், நாச்சியார் கோவில்



இருக்கும்? "உம் மகள் குழந்தை என்றும் காய்கறிகளுக்கு உப்புப் போட வேண்டும் என்றுகூடத் தெரியாதவள் என்றும் கூறினீர். நான் இனி உப்பில்லாத உணவையே விரும்பி உண்பேன்" என்று அருளியதோடல்லாமல் ஸகல தேவர்களையும் அழைத்து மார்க்கண்டேய முனிவருக்கு உவகை யூட்டுவதற்காக அவர் மகளை ஐப்பசி மாதம் திருவோண நட்சத்திரம் கூடிய சுப தினத்தில் திருமணம் செய்து கொண்டார்.

வைகுந்தத்துக்கு நிகரான இந்நகரம் திருவிண்ணகரம் என்றும், மார்க்கண்டேய க்ஷேத்திரம் எனவும் அழைக்கப்படுகிறது. உப்பில்லாத நைவேத்தியம் செய்யப் படுவதால் உப்பிலியப்பன் என்று பெயர் பெற்றார் மாயோன். நான்கு ஆழ்வார்கள் மங்களா சாஸனம் செய்திருக்கிறார்கள்.

திருமங்கை 'மன்னரைப் பற்றி ஒருவர் பெருமானிடமே குறை சொன்னார். பெருமானைப் பாடப் போய்த் தன்னையே பாடிக் கொண்டார் என்பதாகக் கூறினார். விண்ணகர்ப் பெருமானே "அதுவும் நம்மையன்றே சொல்லிற்று" என்று திருவுள்ள மானாராம். இவர் பாடிய பெரிய திருமொழியில் உள்ள ஆயிரம் பாடல்களும் படிக்கப் படிக்கத் திகட்டாது.

அகச் சுவை தோய்ந்து அவர் பாடியுள்ள பாடல்கள் பின்னால் கண்ணனை நாயகனாகக் கொண்டு எழுந்த பல மொழிப் பாடல்களுக்கு முன்னோடி என்று துணிச்சலாகச் சொல்லலாம்.

இந்த உப்பிலி அப்பனுக்கு ஐந்து பெயர் வைத்து நாமகரணம்செய்தவர் நம்மாழ்வார்.

"திருவிண்ணகர்ச் சேர்ந்தவப்பன்
தன் ஒப்பார் இல்லப்பன்
தந்தனன் தான் திறமே"

என்று பாடினார். அதனால் ஒப்பாரில்லப்பன் என்றே திருநாமம்.

இந்தத் தலத்தையும் வைணவர்கள் திருவேங்கடமாகவே எண்ணி வழிபாடு செய்கிறார்கள்.

கோவிலில் கல்யாணங்கள் நடக்கின்றன. ஒரே கூட்டம். கருடாழ்வார் சந்நிதியில் உப்புக் குவியல். எப்படியோ இடித்துப் புகுந்து பெருமாளுக்கு அருகில் சென்றால் பிரமிப்பாகத்தான் இருக்கிறது. நெடியோன் என்ற சொல்லை மெய்ப்பிக்கும் பெருமான், ஆழியும் சங்கும் ஏந்தித் திருக் கல்யாணக் கோலத்தில் காட்சி தருகிறார். ஸஹஸ்ர நாம டாலர் மாலை என்ன! தசாவதார ஒட்டியாணம் என்ன! மயில் கண் கரை போட்ட கலிங்கம் என்ன! "மாம் ஏவ சரணம் வ்ரஜ" என்ற வைரமான வாக்கியத்தை வைரங்களாலேயே வைத்து இழைத்த கரம் என்ன! வைர நாமம் என்ன! சொர்ண முடி என்ன! மாமனார் தன்முகத்தான் கொண்டாடிச் சீர் செய்திருக்கிறார்!

அருகில் அமர்ந்த கோலத்தில் பூமி நாச்சியாரும் எதிரில் மார்க்கண்டேய முனிவரும் அஞ்சலி செய்யும் கரங்களுடன் காணப்படுகிறார்கள். பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பன் என்று ஆழ்வார் பாடியதற்கு ஏற்பச் சர்வாலங்காரத்துடன் பரம மங்கள மூர்த்தியாய்க் காண்கிறோம். உப்பில்லாமல் உண்டாலும் உருண்டு திரண்ட புயங்கள்.

உற்சவ மூர்த்திகள் உள்ளத்தைக் கொள்ளை கொள்கிறார்கள். திருவாபரணங்கள் மேனியை மறைக்கின்றன. அர்ச்சனை தீபாராதனை முடிந்து பிரஸாதம் வழங்குகிறார்கள்.

வைணவத் தலங்களில் தீர்த்தம் தருகிறார்களே! அதுவும் அமுதம்தான். பச்சைக் கற்பூரம், ஏலம், குங்குமப் பூ இருந்துமாய் மணக்கும் குளிர்ந்த நீர். வெள்ளிப் பாத்திரத்திற்குத் தெய்வ சக்தியை வாங்கிக் கொள்ளும் காந்த சக்தி இருக்கிறதாம். துளசிதளம் நறுமணம் கூட்டுவதோடு நீரைப் பரிசுத்தப்படுத்துகிறது. இயற்கையாகவே உயிர் காப்பதால் அமுதமாகவே இருக்கும் நீர், காத்தல் கடவுளின் அருள் பிரஸாதமாக— துளசியின் நறுஞ்சாறு கலந்து அளிக்கப்படும் போது மருந்தாகவே பிணி தீர்க்கும் என்று நம்பலாம். "இன்னும் கொஞ்சம்" என்று கையை நீட்டிக் கேட்கலாம் போலிருக்கிறது.

சங்காழ்வார், சக்கரத்தாழ்வார் இருவரும் செய்த புண்ணியம் போதாதென்று இங்கே இறைவன் திருமுன்பு திருவிளக்கு ஏந்துகிறார்கள். சங்கு சக்கர வடிவில் சரவிளக்குகள் தொங்குகின்றன.

"கையும் உரையும் கருத்தும் உனக்கே அடிமை
செய்யும்படி நீ திருத்தினாய் — ஐயா!
திருவிண்ணகரானே! சிந்தையிலும் என்னேன்
பெரு விண்ணகர் ஆளும் பேறு."

பின்னைப் பெருமாள் ஐயங்கார், 'வைகுந்த பதவியே வேண்டாம்; ஒப்பிலியப்பன் தரிசனம்தான் வேண்டும்' என்று கூறுகிறார்.

நாச்சியார்கோவில் புகைப்படங்கள்:
என். ராமகிருஷ்ணன்

# சந்தோஷ குடும்பத்தின் உண்மை ரகசியம், எப்பொழுதும் நேர்த்தியான தேர்ந்தெடுப்பு.





இதன் வெளிப்படை உண்மை அனைவருக்கும் ஏற்ற
எமது வண்ண வண்ண ஆடைகள் மற்றும் உள்ளாடைகள்.

**M.L.T.E.X**

Manufactured by: Under Control Briefs & Vests

2-L, Bridgeway Colony
TIRUPUR-638 607.

MY AD MLT-12.

---

5 வருடம் உத்திரவாதமுள்ள 'மெரி' சூப்பர் ஸ்பெஷல் தங்ககவரிங் நகைகளை 15 வருட ஆராய்ச்சியின் பலனாக இந்தியாவில் முதல் முறையாகத் தயாரித்து இந்தியா முழுவதும் அதிக அளவில் வி.பி.பி. மூலம் அனுப்பி வரும் ஸ்தாபனம். சகல விபரங்களுக்கும் இனும் கேட்லாக் வாங்கிப் பார்க்கவும் இதில் உள்ள நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதினால் வி.பி.பி. மூலம் பொருட்கள் அனுப்பப்படும். (வி.பி.பி. சார்ஜ் தனி) ஏஜெண்டுகள் தேவை




## மெரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

தபால் பெட்டி 1405, 14, ரெங்கநாதன் தெரு.
தி.நகர் சென்னை-600 017.

# பிரதமர் படை அனுப்பாதது ஏன்?



○ இந்திரா

○ மொரார்ஜி

○ கே. கர்ணு, நெம்பரம்

? இலங்கைப் பிரச்னை குறித்து மொரார்ஜியின் வாதம் அசந்தர்ப்பமானதாகவும் தற்போதைய நிலைமைக்கு ஒவ்வாததாகவும் உள்ளதே?

! அசந்தர்ப்பமானதாக இருக்கலாம். ஆனால் உண்மை அதுதான். உண்மைகள் பல சமயங்களில் கசக்கவே செய்யும்.

○ இ. வசந்தகுமார், ஆறுமுகனேரி

? மத்திய மாநில அரசுகள் இலங்கைக் கலவரத்தை யொட்டி மேற்கொண்டுள்ள நடவடிக்கைகள் பற்றித் தங்கள் கருத்து?

! ரோம் பற்றி எரிந்தபோது வயலின் வாசித்த நீரோவினால் யாருக்கும் துன்பம் நேரவில்லை யாயினும் அதிகரிக்கவில்லை. ஆனால் நம் தலைவர்கள் பலரின் பேச்சும் செயல்களும் இலங்கைத் தமிழர்கள்பால் சிங்களவருக்கு வன்மம் வளரவே துணை செய்யும்.

○ டி. ஏஞ்சல் மேரி, கோவில்பட்டி ★

? பங்களா தேச மக்களைப் பாதுகாத்த நம் பிரதமர் படைகொண்டு பாரத தமிழ் வம்சா வழியினரைக் காக்கத் தயங்குவது ஏன்?

! பங்களா தேசப் பிரச்னையும் ஈழத் தமிழர் பிரச்னையும் ஒன்றுவிடாது. பங்களா தேசில் மக்கள் அனைவரும் ஒருமுகமாக பாகிஸ்தானின் அடக்கு முறையிலிருந்து விடுதலை பெற ஏங்கினர்கள். ஈழத்தில் தமிழர் சிறுபான்மையினராக இருக்கிறார்கள். அவர்களிலும் தனி ஈழத் தமிழ்நாடு கோருகிறவர்கள் இன்னும் குறைவு. ராணுவத்தை அனுப்பி யுத்தத்தில் வெற்றி பெறலாம்; ஆனால் மக்களின் மனங்களை வெல்ல முடியாது. பங்களா தேச மக்கள் இந்திய ராணுவத்துக்கு அளித்த கோலாகல வரவேற்பை இலங்கையில் எதிர்பார்க்க முடியாது. இது ஆக்கிரமிப்பு என்றே உலக நாடுகளால் கருதப்படும்.

○ வி. ரமணி, மணக்கால்

? தமிழர்களைச் சிங்களவர் ஏன் கொன்றார்கள்? தமிழர்கள் என்ன செய்தார்கள்?

! ஈழத் தமிழர்கள் தாங்கள் இரண்டாந்தரக் குடிமகனாகக் கருதப் படுவதை எதிர்க்கிறார்கள். சிங்களவருடன் சகலத்திலும் சம அந்தஸ்து எதிர்பார்க்கிறார்கள். இதற்காகப் போராடி அலுத்துப்போன பலர் ஈழத்தில் தமிழருக்குத் தனி நாடு கோருகிறார்கள். இந்த லட்சியத்தை அடைய வன்முறைகளில் இறங்குகிறார்கள். ரொம்ப நாளாகக் கூமுறிக் கொண்டிருக்கும் எரிமலை இது. அண்மையில் 13 ஸ்ரீலங்கா ராணுவத்தினர் தீவிரவாதிகளால் கொல்லப்பட்ட போது எரிமலை வெடித்துச் சர்வ நாசத்தை விளைவிக்க ஆரம்பித்து விட்டது.

சிங்களவருடன் சம உரிமை கோருவதிலும் அதற்காக சாத்வீக முறைகளில் போராடுவதிலும் தவறில்லை. ஆனால் பிரிவினை வாதமும் வன்முறையும் சரியல்ல. இதனால்தான் ஜெயவர்த்தனே அங்குள்ள இந்திய வம்சாவழியினரான தமிழருக்கு அதிகபட்சமாக உதவ முடியாமல் இருக்கிறது. நமது மத்திய அரசும் ஸ்ரீலங்கா ராணுவத்தின் அட்டூழியங்களை வன்மையாகக் கண்டிக்க முடியாமல் தடுமாறுகிறது.

○ இரா. மு. குமார், திருச்சி-5

? இலங்கைத் தமிழர் நிலைமை மிகவும் மோசமாகி விட்டபோதிலும் மத்திய அரசும் மாநில அரசும் ஒன்றும் செய்யாமல் இருக்கின்றனவே?

! செய்கின்றன; ஆனால் உருப்படியாக எதுவும் செய்யவில்லை என்பதுதான் வருத்தம் அளிக்கும் விஷயம். ஒட்டு மொத்தமாக எல்லோரது சார்பிலும் இந்தியாவின் தார்மீகக்குரலாக, ஒரே குரலாக பிரதமர் இந்திரா காந்தி பேசியிருக்க வேண்டும். அதற்கு மாநில அரசுகளின், அனைத்துக் கட்சிகளின் ஒத்துழைப்பையும் அவர் கோரிப் பெற்றிருக்க வேண்டும். நமக்குள் இவ்விஷயத்தில் ஆயிரம் அபிப்பிராய பேதம் இருப்பதால் இந்தியாவின் தார்மீகக் குரல் வலுவிழந்து போயிற்று. (2) நமது ராணுவத்தின் மருத்துவப் பிரிவில் ஒரு பகுதியை மனிதாபிமானப் பணியாற்ற இலங்கை அரசின் அனுமதி பெற்று அனுப்பி யிருக்கலாம். (3) உடையும் உணவும் கப்பலேற்றி அனுப்பலாம். (4) உலக நாடுகளின் அனுதாபத்தை ஈழத் தமிழருக்குப் பெற்றுத் தருவதிலும் உலக

நாடுகளின் கண்டனத்தை இலங்கை அரசுக்குத் தெரிவிக்கச் செய்வதிலும் இன்னும் சாணக்கியம் காட்டிச் செயல்பட்டிருக்கலாம். (5) ஈழத்தில் உள்ள நாடற்றவர் பிரச்னைக்கும் தமிழருக்கு சம அந்தஸ்து அளிக்கும் பிரச்னைக்கும் நீண்ட கால நோக்கில் தீர்வு காண முத்தரப்பு, இருதரப்புப்பேச்சு வார்த்தைகளை ஆரம்பிக்கத் தீவிரமாக முயலலாம்... இத்யாதி...இத்யாதி....

○ சிவா, பெரியபாளையம்

? ஈழம் பற்றி எரிகையில் எழுத்தாளர், கவிஞர்கள் கடமை என்ன?

கண்ணியம் காப்பது முதல் கடமை. ஈழத் தமிழருக்கு அனுதாபம் தெரிவிக்கவும், இலங்கை ராணுவத்தின்வெறித்தனத்தைக் கண்டிக்கவும் கூடிய கவிஞர்களில் சிலர் இந்திரா காந்தி மீது பச்சை பச்சையாக வசை மாரி பொழிந்தனர். மற்ற கவிஞர்களுக்கு இது தர்ம சங்கடத்தைத் தோற்றுவித்தது எதிர்பார்க்கக் கூடியதே. எதிர்பாராதது. இந்த வசைமாரியை நம் முதல்வரின் ஆதரவு பெற்ற ஒரு பிரபல வாரப் பத்திரிகை ஆசிரியர் நியாயப் படுத்த முயன்றதுதான்!

○ ரஸாக், திருப்பூர்

? நான் ஒரு பத்திரிகை நிருபராக ஆசைப்படுகிறேன். எனக்கு என்ன யோசனை?

! அடிபடவும் உதைபடவும் தயாராகுங்கள்! அண்மையில் ஒரு பத்திரிகை நிருபர் அரசியல்நிலவரங்களை அறிய எம். எல். ஏ.க்கள் சிலரைச் சந்தித்துப் பேசிய பிறகு எம். எல். ஏ. ஹாஸ்டல் முன்பாகவே நையப் புடைக்கப்பட்டார். இன்று நிலைமை அப்படி இருக்கிறது.

○ ஆறுமுகம், நாங்குநேரி.

? கலைஞரின் ஆகஸ்டு 4—5 போராட்டம் அவசியமா?

! சிறிதும் தேவையற்றது. ஆகஸ்ட் 2 கதவடைப்பிலேயே சர்வ கட்சிகளின் ஒத்துழைப்போடு தமிழகம் முழுவதுமே ஈழத் தமிழருக்குத் தனது அனுதாபத்தையும் இலங்கை அரசுக்குத் தனது கண்டனத்தையும் அழுத்தமான முறையில் தெரிவித்து விட்டது. இப்போது மறுபடியும் ஆர்ப்பாட்டம் செய்வதாலும் ரயிலை நிறுத்துவதாலும் தமிழக மக்களுக்குத் தொல்லை தருவது தவிர வேறு ஒரு பயனுமில்லை. 'மத்திய அரசு ஈழத் தமிழர் பிரச்னையில் இன்னும் வன்மையாகச் செயல்பட வேண்டும் அதற்காகத்தான் போராட்டம்' என்கிறார் கருணாநிதி. அவர் கூறுவது போல இலங்கை மீது பாரதம் படையெடுப்பது சாத்தியமல்ல என்பது அவருக்கே நன்கு தெரியும். ஏதாவது கூறி அல்லது செய்து மாநில-மத்திய அரசுகளுக்குத் தர்ம சங்கடத்தை விளைவிப்பதே அவர் நோக்கம். இந்த ஆகஸ்டு 5 போராட்டத்தில் உடன்பிறப்புக்கள் அவருடன் ஒத்துழைக்கலாம்; பொதுமக்கள் அச்சத்தால் ஒதுங்கி விருக்கலாம்; ஆனால் பொதுஜன ஆதரவை அவர் பெற முடியாது. இது மாநில, மத்திய அரசுகளை மட்டுமல்ல, தமிழகப் பொது மக்களையும்பகைத்துக்கொள்கிற காரியமே.



○ கருணாநிதி



○ ஜெயவர்த்தனே

○ வசந்தா பார்த்தசாரதி, சென்னை

? குடும்ப பட்ஜெட்டை நீங்கள் கவனிப்பீர்களா? அல்லது உமது மனைவியா?

தினமும் ஒரு தடவை அவள் சொல்லித் தான் பார்க்கிறள்: என்னால் சமாளிக்க முடியவில்லை. நீங்களே பார்த்துக்குங்க. நான்: உன்னுடைய சாமர்த்தியம் எனக்கு வராது; நீயே கவனிச்சுக்க. அவள்: இப்படி ஐஸ் வைச்சு, வைச்சு நழுவிடுங்க! நான்: ஆபீஸுக்கு நேரமாச்சு, சாயங்காலம் பேசலாம்! அவள்: நீங்கதானே! ராத்திரிதான் வருவீங்க, கேட்டா 'ரொம்ப டயர்டா இருக்கு; ராத்திரியிலே கணக்குச் சொல்லிக் குழப்பாதே; காலமை பார்த்துக்கலாம்'பீங்க....

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
திருமதி ஏஞ்சல் மேரி தேவசகாயம்
ஜவஹர் ரேடியோ சென்டர்,
857, மெயின் ரோடு
கோவில்பட்டி-627.701





# கவிதையும் மன்மதக் கலைதானோ?

இடையில்....

என் முடிவை மாற்றிக் கொள்ள முடியாதவனாகவே இருக்கிறேன்.

கல்கி ஆசிரியர் அவர்கள், வந்த கவிதைகளை வடிகட்டித்தான் எனக்கு அனுப்பினார்.

படித்த பிறகு—

என் விமர்சனம் பெருமூச்சாய் வெளியாயிற்று.

தமிழ்நாட்டில் கவிதை எழுதுகிறவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது. ஆனால் கவிஞர்களின் எண்ணிக்கை குறைவாக இருக்கிறது.

விமர்சகர்களே!

என்னைப் புரிந்துகொள்ளுங்கள்.

என் கண்ணீர்த் துளிக்குக் கலர் அடித்து விடாதீர்கள்.

என்னுடையது சுய சோகமில்லை; இலக்கிய சோகம்.

உள்ளடக்கத்தைப் புதுப்பித்தாலொழிய மரபுக் கவிதைகள் மாண்புறா என்பதுதான் என் ஆதங்கத்தின் அர்த்தம்.

சகஸ்ரநாமம் சொல்லுகிறவன் கடைசியில் தன் பெயரை மறந்து விடுகிற மாதிரி யாப்பையும் சந்தங்களையும் காப்பாற்ற நினைப்பவர்கள் உள்ளீட்டை மறந்துவிடுகிறார்கள்.

யாப்பைப் பயன்படுத்தி, கடைசியில் செய்யுளைச் சிருஷ்டித்து விடுகிறார்கள்.

யாப்பிலக்கணம் சுத்தமாக இருக்கிறது.

சந்தங்கள் சரியாகவே இருக்கின்றன.

சீர்களில் எங்காவது ஓரசைச் சொல் வந்தால் வரும் சீரிலிருந்து ஓரெழுத்தைக் கடன் வாங்கி நிரப்பி, யாப்பிலக்கணத்தைக் காப்பாற்றி விடுகிறார்கள்.

ஆனால், கவிதையைச் சாகடித்து விடுகிறார்கள்.

''பூக்கோலம் செடியழகை உயர்த்தும்; சீதப்
பிறைக்கோலம் வானழகை உயர்த்தும்;
நீட்டும்
மாக்கோலம் வீட்டழகை உயர்த்தும்; விசும்
ஒளிக்கோலம் விளக்கழகை உயர்த்தும்...''

இப்படி எந்தெந்தக்கோலம் எதையெல்லாம் உயர்த்தும் என்று வாய்ப்பாடு எழுதிவைத்துக்கொள்வதல்ல கவிதை.

''நெஞ்சம் களித்திட கொஞ்சி மகிழ்ந்திட
வந்திடும் இனியவனே!
கொஞ்சம் நிலவில் சிந்தும் எழிலைக்
கொண்டு தருபவனே!
பஞ்சும் வருத்திடும் பட்டினைப்
பொன்மேனி பெற்றவனே!
கொஞ்சு மொழியில் விஞ்சுபவரில்லை
வந்திடு கண்மணியே!''

என்று மேனி மினுக்கும் மெல்லெழுத்து வார்த்தைகளைக் கைது செய்து வைத்து விடுவதல்ல கவிதை.

கவிதையில் உள்ள சிரமமே — எது கவிதையாக இருக்க முடியாது என்று சொல்லி விட முடியும்; எது கவிதையாக இருக்க முடியும் என்று சொல்லிவிட முடியாது.

தனக்குள் முழுசாக இறங்கிய விஷயத்தைத் தான் ஒரு கவிஞன் இறக்கி வைக்க வேண்டும் என்பதுதான் எனது கவிதைக் கொள்கை.

கவிஞர்கள் இங்கே கவிதையில் எழுதுவதற்கு அவர்கள் அனுபவித்த அல்லது அனுபவித்துக் கொண்டிருக்கிற ஆயிரம் விஷயங்கள் இருக்க, இவர்களோ எட்டாத எட்டிக் கனிகளையே எழுதிக் கொண்டிருக்கிறார்கள்.

உணர்ந்த விஷயங்களை எழுதும்போது கவிதைக் குழந்தை அதுவாகவே பிதுங்கிப் பிறந்து விடுகிறது.

பொய்யுணர்ச்சியில் எழுதும்போதுதான் கவிதைக் குழந்தையை அறுத்தெடுக்க வேண்டியிருக்கிறது.

தமிழ்க் கவிஞனே!

யாப்பு என்பது கவிதைக்குக் கம்பீரம் தரும் ஒரு கட்டுமானம். அதில் நீ உணர்ந்ததை எழுது, உணர்ந்த விரும்புவதை எழுது. நீ சமூகத்தோடும், சமூகம் உன்னோடும் சம்பந்தப்பட்டிருப்பது மெய்யாயின், உன்கவிதைகளையும்அந்த மெய்யுணர்ச்சிகளோடுபேசவிடு.

ஒவ்வொருவனின் கவிதைக்கும் தனித்துவம் உண்டு.

ஏனென்றால் ஒருவனின் வாழ்க்கையைப் போல் இன்னொருவன் வாழ்க்கை இல்லாதது.

கடைசியில் நான் சோர்ந்து போய் இப்படியொரு தவிர்க்க முடியாத முடிவுக்கு வருகிறேன்.

கவிதையும் மன்மதக் கலைதானோ?

இரண்டுமே சொல்லித் தெரிவதில்லையோ?

இத்தனைக்கு மத்தியிலும் நல்ல சில கவிதைகள் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கின்றன.

அவை தொடர்ந்து வெளி வரும்.

எனது பக்கத்தை வளரும் அந்தக் கவிஞர்கள் பயன்படுத்திக் கொள்ளட்டும்.

நான் கொஞ்சம் ஒதுங்கிக் கொள்கிறேன்.

வளரும் கவிஞர்களைத் தூரத்திலிருந்து அழகு பார்க்கவே எனக்கு ஆசை.



# ஒரு மரணம் வாழ்கிறது

நிழற்படம் கையில்; சார்ந்த
நெஞ்சிலோ வெய்யில்! சுப்பன்
இழப்பதற் கெதுவும் இல்லை
இதழ்களில் செலவுச் செய்யுள்!
அழற்படும் வேர்வைப் பொட்டாய்
அலைகிறான்; சினிமா ஆசை
குழப்பிடக் கசங்கிப் போனான்
கூவத்தில் வாசம் செய்தான்!

''திரைப்படம் ஒன்றி லேனும்
திருமுகம் தெரியும் வண்ணம்
உருப்படி யாகத் தோன்றி
உலாவரக் காண்பீர்! அன்றே
தெருப்படி மிதிப்பேன்'' — என்று
நீட்டிய உரையால் நாளும்
செருப்படி விதைத்தான் மண்ணில்;
சிரசினைக் காலில் தைத்தான்!

ஏதேதோ ஸ்டுடியோ வெல்லாம்
எத்தனை முறைகள் அந்தப்
பாவியை விழுங்கித் துப்பிப்
பழித்தன: கண்ணீர்ப் பூட்டின்
சாவியைத் தந்த மேலோர்—
சாப்பிடத் தரவே இல்லை....
ஆவியைக் கூவி விற்றான்,
ஆயுளைப் பசிக்குத் தின்றான்!

'புத்தனை'ப் படமாய் ஆக்கும்
புரவலர் 'ஆசைப் பித்தன்'
எத்தனை இடங்கள் பார்த்தும்
இறப்பினை இயல்பாய்க் காட்ட
மொத்தமாய்க் காட்சி ஒன்று
முகிழ்க்கவே இல்லை என்று
கத்தவே — 'உதவிக் காரனார்'
கடைத்தெரு நாயாய்ப் போனார்!

சூரியன் படுக்கும் நேரம்...
சுப்பனைக் கூட்ட மெல்லாம்
காரியம் முடிப்போ மென்று
கட்டிலில் கிடத்தித் தூக்கி
சேரியின் புறத்தே வந்தார்;
சிலரது வாயில் போன
'காரியக் கரைசல்' கூத்தை
கால்களின் வழிபா டிற்று!

நீர்த்துளி கண்ட சென்னை
நிலமெனப் படம் பிடிப்போர்—
பார்த்தனர் இந்தக் காட்சி
பலவிதக் கோணம் கட்டுச்
சேர்த்தனர்: சுப்பன் சொன்ன
செயலினை முடித்தான் என்று
வேர்த்தன உறவுக் கண்கள்!
வீட்டிற்கு இனிச்செல் வானோ?

மதுக்கூர் கண்ணன்

பம்பாய்கோரேகாவில்ஒருபஸ்ஸ்டான்டில் எழுபது வயது மதிக்கத் தக்க ஒரு பெரியவர் தினமும் பஸ்ஸில் பிரயாணம் செய்யும் பயணிகளை வரிசையாக நிற்க வைத்து, ஒருவர் பின் ஒருவராக பஸ்ஸில் வரிசையாக ஏற விடுகிறார். இவரைத் தாண்டி ஒருவரும் பஸ்ஸில் குறுக்கு வழியில் ஏற முடியாது. இதற்காகப் பயணிகள் கொடுக்கும் 10 காசு 15 காசுகளைப் பெற்றுக் கொண்டு காலத்தை ஓட்டுகிறார்.

இந்த வயதிலும், ''உழைத்துத் தான் சாப்பிடவேண்டும்'' என்ற கொள்கையைப் பாராட்டத்தானே வேண்டும்!

ஆர். குமார்

★★

# ஒரு "கிளிக்"கின் கதை

பெங்களூர் சென்று இரண்டு நாள் தங்கி ஊர் சுற்றிப் பார்ப்பவர்கள் அநேகமாக BULL TEMPLE காணாமல் திரும்ப மாட்டார்கள். அங்கே நந்தி பகவானுக்குத்தான் முக்கியத்துவம்.

கோவிலுக்குப் பக்கத்தில் ஒரு சோலை. அதன் வழியே நடந்தபோது, மரங்களினூடே பாய்ந்த ஒளி ஒரு பாறையைக் குளிப்பாட்டுவதைப் பார்த்தார் புகைப்படக் கலைஞர் ஸ்ரீதரன்.

'அடடா இப்போ இங்கே ஓர் அழகிய பெண்மணி இருந்தால் இந்தப் பாறை மீது அமர்த்தி இந்தச் சோலைப் பின்னணியில் படம் எடுக்கலாமே' என்று அவரது கலை உள்ளம் நினைத்ததோ இல்லையோ...

ஏதோ மந்திர ஜாலம் போல் அதே சமயம் அங்கே அனுபமா தன் அத்தையோடு வந்தார்.

''மிஸ்....ப்ளீஸ்....'' என்று ஆரம்பித்து விவரம் கூற அனுபமா ஒப்புக்கொண்டார். பிளஸ்-டூ முடித்திருந்த அனுபமா சென்னையிலிருந்து லீவுக்குத் தன் அத்தையைக் காண பெங்களூர் வந்திருக்கிறார் என்ற அளவுக்குத் தான் ஸ்ரீதரனுக்குத் தெரிய வந்தது.

''ஸார்! அனுபமா இப்போது என்ன செய்கிறாரோ தெரியாது. ஃபோட்டோவுக்கு போஸ் கொடுத்ததற்கு நான் அவருக்கு நன்றி தெரிவித்ததோடு சரி. கல்கியில் இந்த வண்ணப் படத்தைப் பார்த்ததும் அவருக்குத் தம் அத்தையுடன் கழித்த ஓர் இனிய விடுமுறை நினைவுக்கு வந்தால் அதையே அவருக்கு நான் செலுத்தும் கைம்மாறாக எண்ணிக் கொள்ளட்டும்'' என்கிறார்....

...வண்ணப்படம் எடுத்தஸ்ரீதரன்
பேட்டி: சந்திரா





''நீங்கள் லே-அவுட் போட்டு விற்ற வீட்டு மனைகளை அரை மணி நேரத்துலே அடைந்துவிடலாம் என்றீர்களே....''

''ஆமாம்! மணிக்கு 200 கிலோ மீட்டர் ஸ்பீடுலே காரில் போனால் அரை மணியில் அடைந்துவிடலாம்.''




''450 வாங்கியிருக்கான் பாபு. கண்டிப்பாக காலேஜில் இடம் கிடைத்துவிடும்!''

''இந்தக் குறைந்த மார்க்குக்கா இடம் கிடைக்கும் என்கிறாய்?''

''மார்க்கா? நான் பொரிசுக் கட்டத்தைச் சொன்னேன்!''

— லலிதா செல்லப்பா




Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

